


க்டோபர் 1974 □ சிறப்பு இதழ் □ 2-00 ரூபாய்



அரசியல்

சமூகம்

கல்வி

தொழில்

தத்துவம்





# யோக நித்திரையில் எம்பெருமான்

“இந்திர நீலம் போல் பிரகாசிக்கின்ற மேக வர்ணமும், பூரண சந்திர பிம்பம் போல் பிரகாசிக்கின்ற திருமுகத் தாமரையும், மூன்றும் பிறைபோல் விளங்கப்பட்ட நெற்றியும், பஞ்சாயுதங்கள் தாங்கப்பட்ட கைத்தாமரை களும், வீரலட்சுமி வசிக்கின்ற தோள்களும், கிருபையே வடிவ மாய் விளங்குகின்ற திருக்கண் தாமரைகளும், அவற்றினுள் மதுபானம் குடித்து மயங்கிக் கிடக்கின்ற வண்டுகள் போன்ற கரு விழிகளும், கோதண்டத்திற்குச் சமானமாய் வளைந் திருக்கின்ற புருவங்களும், கொவ்வைக் கனிபோலும், பவளம் போலும் சிவந்தவாய்த் தாமரையும், எள்ளின் புட்பத்தை ஒத்த நாசிகளும், திரிலோகங்களும் பிரமை கொள்ளத்தக்க புன்சிரிப்பும், வலம்புரிச் சங்கு போன்ற கழுத்தும், மகா இலட்சுமி வாசமாயிருக்கின்ற மார்பும், சகல சராசரங்களும் அடக்கி வைத்திருக்கின்ற திருவயிறும், கங்காவர்த்தனம் சுழித்திருக்கின்ற சுழல் போன்ற நாபித் தாமரையும், வாழைத் தண்டையொத்த துடைகளும், செங்கரும்பைப் போன்ற கணைக் கால்களும், சந்திர ரேகை, வச்சிர ரேகை, பதும ரேகை, அங்குச ரேகை, கவுசிக ரேகைகளுடன் சிவந் திருக்கப்பட்ட பாத தாமரைகளும், நவரத்தின கசிதமாய் கோடி சூரியர் ஒளிபோல் பிரகாசிக்கின்ற கிரீடமும், மகர குண்டலங்களும், வனமாலை முதலிய சுகந்த பரிமள புட்ப மாலைகளும், கவுஸ்த ஆபரணம் முதலிய நானு விசித்திரா பரணங்களும், வினோத விசித்திரப் பீதாம்பரமும் பிரகா சிக்கும்படி மகா வைபவத்துடன் ஒரு கையைச் சிரசின்கீழ் வைத்துக்கொண்டு, மற்றொரு கையைத் திருமேனிமேல் நீட்டிக்கொண்டு, ஆயிரம் பணுமுடிகளையுடைய ஆதிசேஷன் பேரில் யோக நித்திரை செய்து கொண்டிருந்தார்.”

*(1898-ல் எழுதி வெளியிடப்பட்ட ‘ஸ்ரீரங்க மகாத்மியம்’ என்ற நூலில் அமரர். சே. ப. நரசிம்மலு நாயுடு அவர்கள்)*









தீங்கின்றி நாடெல்லாம்
திங்கள் மும்மாரி பெய்து

..................................

நீங்காத செல்வம் நிறைந்
தேலோர் எம்பாவாய்!

—ஆண்டாள்.



# துன்பம் இன்றேல்... விடுதலை இல்லை!

துன்பத் தீயில் பரிசுத்தமாக்கப் படாமல் எந்த நாடும் உயர்ந்த நிலையை அடைந்ததில்லை. தன் குழந்தை உயிர் வாழ வேண்டும் என்பதற்காகத் தாய் துன்பத்திற்கு உள்ளாகிருள். கோதுமை வளர்வதற்கு, விதைத்த தானியம் அழிந்தே தீர வேண்டும். மரணத்திலிருந்துதான் ஜீவன் வருகிறது. எனவே துன்பத்திற்கு உள்ளாவதன் மூலம் பரிசுத்தமாக வேண்டுமென்ற இந்தச் சாசுவதமான சட்டத்தை நிறைவேற்ருமல், அடிமைத்தனத்திலிருந்து எழ முடியுமா?

ஒரு தந்தை அநீதி இழைத்தால் அந்த வீட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டியது அவரது குழந்தைகளின் கடமையாகும். ஒரு நகரசபையின் தலைவர் லஞ்ச ஊழலைக் கைக்கொள்ளுவாராயின், அதன் அங்கத்தினர்கள் அச்சபையிலிருந்து விலகுவதன் மூலம் தங்களுக்கும் லஞ்ச ஊழலுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையெனக் கைகழுவிவிட வேண்டும். அதுபோலவே ஓர் அரசாங்கம் மகத்தான அநீதி இழைக்குமாயின், ஆட்சியாளரை அவரது கொடிய நடவடிக்கைகளிலிருந்து தடுப்பதற்குப் போதிய அளவில் பிரஜைகள் முற்றிலுமோ அல்லது ஓரளவோ அதனுடன் ஒத்துழைப்பை நிறுத்திவிட வேண்டும். இவ்விதம் நான் கற்பனை செய்துள்ள ஒவ்வோர் உதாரணத்திலும் மனம் அல்லது உடல் பற்றிய துன்ப அம்சம் இருக்கிறது. அத்தகைய துன்பமின்றி விடுதலை பெறுவது முடியாத காரியமாகும்.

—காந்திஜி



[ இன்றைய நாட்டு நடப்பிற்குச் சம்பந்தப்படுத்தாதீர்கள். இது எழுதப்பட்டது 16—6—1920 — 'எங் இந்தியா']






Press Secretary
to the President
Rashtrapathi Bhavan
NEW DELHI-11004
September 23, 1974

Dear Shri Ramamurthy

The President thanks you for your greetings and good wishes. He sends his best wishes to the Trust for success in its educational activities and hopes that the Journal 'MEMBALAM' will prove useful.

Yours Sincerly

*A. M. Abdul Hamid*
Press Secretary to the President






Raj Bhavan
MADRAS-22

I wish the special October Number 'MEMBALAM' Success.

*K. K. Shah*
**Governor of Tamil Nadu**






M. KARUNANIDHI

CHIEF MINISTER

FORT ST. GEORGE,

MADRAS-9


I am happy to know that Thiru. S. P. Narasimhalu Naidu Estate Trust. Coimbatore has proposed to bring out the October 1974 issue of the Journal 'MEMBALAM' to commemorate the 60th year of Thiru G.K. Sundaram.

I wish Thiru Sundaram many more years of long life, and wish your efforts all success.

*M. Karunanidhi.*




Minister of
Agriculture
Govt. of India
NEW DELHI-110001
September 6, 1974

I am glad to learn that 'MEMBALAM' is proposing to dedicate its October issue in honour of Sri G. K. Sundaram on the happy occasion of his 60th birthday.

As a Parliamentarian, Industrialist, and Educationist his contribution to the nation in general and to Coimbatore District in particular has been invaluable.

I wish Sri Sundaram a long and fruitful life.

*C. Subramaniam*



**K. KAMARAJ**
8, Tirumalai Pillai Road
MADRAS

Dear Friend,

I am glad that the October issue of 'MEMBALAM' will be dedicated to Sri G. K. Sundaram.

I send my hearty good wishes to your Journal for bringing out the special issue commemorating the the 60th year of Sri G. K Sundaram who has served the people in a variety of ways and has earned rightly the praises of the people. May God grant him many years of useful services in the cause of humanity.

Yours Sincerely

*K. Kamaraj*



**V. V. GIRI**
" GIRIJA "
1, THIRD BLOCK
JAYANAGAR
BANGALORE-560011

Dear Sir,

I am very happy to hear that you are celebrating the 60th year of my good friend Shri G. K. Sundaram. He has done yeomen services to the country as an Industrialist and a Parliamentarian. He has taken great interest in the educational Institutions and in helping the poor in every way. I wish him a long life, happiness and prosperity.

Yours Sincerely
*V. V. Giri*



**Dr. G RANGASWAMY**
VICE - CHANCELLOR
Tamil Nadu Agricultural University
COIMBATORE
September 5, 1974

Dear Thiru Ramamurthy

I am glad to learn that your October 1974 issue will be dedicated to Thiru. G. K. Sundaram.

Thiru. Sundaram is a well-known Parliamentarian, Industrialist and a Philnthrophist. He is considered as one of the foremost industrialists of Tamil Nadu and Country. His contributions towards development of textile industry in the country are well-known. I feel proud to have known him eversince I took up my present assignment as Vice-Chancellor of the Tamil Nadu Agricultural University.

In dedicating the next issue of your journal to Thiru. G. K. Sundaram, you are recognising a noble son of the country. My congratulations and best wishes on this occasion.

With kind regards.

Yours Sincerely

*G. Rangaswamy*

# வாழ்த்து



கோவை நகருக் கணிகலனுக்
குலவும் மணியென் றிலகுகின்றான்;
சேவை பலவா ருச் செய்யும்
செம்மல் ஜி. கே. சுந்தரம் காண்;
ஓவில் முயற்சி உடைய அண்ணல்,
ஓங்கும் தொழில்கள் பலநடத்தும்
மாவன் மையுறும் பேராளன்
வாழ்க வாழ்க! நலம் சிறந்தே!

உடலுக் கமைந்த பிணிபோக்கும்
உயர்மா மருத்து வச்சாலை
திடமுற் றுளிர உளத்தினிலே
சிறந்த அறிவு புகுத்துகின்ற
இடமாம் பள்ளிக் கூடமிவை
இலகச் செய்தான்; அரசியலில்
படர்செய் நேர்மை நிலைபெறுமா
பார்க்கும் பண்பன் வாழியவே.

இனிய சொல்லான்; புன்னகையே
இலகும் முகத்தான்; இலக்குமிப்பேர்
கனியும் தொழிற்சா லையுலகம்
களிப்பிற் புகழும் படிநடத்தும்
தனியன் புள்ளான்; பலருக்கும்
தயையால் நலமே செய்கின்றான்;
நனிபல் லாண்டு சுந்தரநன்
னமத் தான்பார் வாழியவே.

குப்பு சாமி நாயுடுவின்
குமரன்; தேச பக்தியிலும்
தப்பின் றிறைவன் பாற்பக்தி
தழைக்கும் பண்பு தன்னிலுமே
ஒப்பின் றுயர்ந்த பெருஞ்செல்வன்,
உலகிற் பலநாட் டிற்சென்று
கப்பும் நிலையை அறிந்து வந்தான்;
கவின்சுந் தரம்சீர் வாழியவே.

கி. வா. ஜகந்நாதன்
'ஆசிரியர்' கலைமகள்

S. NARAYANASWAMY, M. L. C.
MADRAS.

Dear, Mr. Ramamurthy

I am glad to note that your monthly journal ' MEMBALAM ' is bringing out a special issue in honour of Sri G. K. Sundaram's 60th Birthday. I heartily send my cordial greetings and good wishes for the success of your special issue.

I have no doubt your special edition which is devoted to one of our rare good men who combines exalted character with a deep dedication to the development of the economy, will be worthy of him.

Thanking you, and with all good wishes,

Yours sincerely

S. Narayanaswamy

924


**K. VENKATESALU**

Chairman

The Southern India Millowners' Association.

Coimbatore.


Dear Sir,

I am glad to know that your monthly journal 'MEMBALAM' is making notable contribution in the publication field and carries useful information to the Coimbatore public.

It is in the fitness of things that you have proposed to dedicate your October 1974 issue in honour of Shri G. K. Sundaram, on his 60th year. Shri G. K. Sundaram is no stranger to the public of Coimbatore. His contributions for the industrial development of Coimbatore as well as his service to the humanitarian causes, welfare and education of the society need no emphasis. Coimbatore is fortunate in having such a devoted leader and citizen.

Let us all join hands in praying the Almighty for his health and long life so that Coimbatore may continue to enjoy the benefit of his service for many more years to come.

Yours faithfully

K. Venkatesalu

# நல்வாழ்த்துக்கள்!





## திரு. S. P. நரசிம்மலு நாயுடு எஸ்டேட் டிரஸ்ட்



''வேதாந்த வித்தகனே! உண்மையான யோகத்தினுல், எங்கள் இருவருடைய ஆத்மாக்களைப் பந்தப்படுத்தி, நான் என் மனைவியிலும், என் மனைவி என்னிலும், நாங்கள் இருவரும் உன்னிலும் கலந்து சுகித்திருக்க அருள்வாய்!''

— வேதம்



பாலம் – 1  அக்டோபர் 1974  இணைப்பு – 7

# காணிக்கை!





ராஜாஜியின் வாழ்வு முழுவதும் மக்களின் நல் வாழ்வுக்கும் நாட்டின் முன்னேற்றத்துக்கும் அர்ப்பணம் செய்யப்பட்ட வரலாறு.

இப்படிப்பட்டவர் நிழலில் வளர்ந்து கொள்கைகளில் உரமிடப்பட்டு அவர் கண்ட லட்சியத்துக்கு வடிவு கொடுத்து வருபவர்தான் **திரு. ஜி. கே சுந்தரம்.**

அவருக்கு நீண்ட நெடிய அரசியல் பாரம்பரியம் உண்டு. அவருடைய வாழ்வு பல்வேறு வகைகளில் ஒளிமயமானதாக இருக்கிறது. அவர் எடுத்த பணி அனைத்திலும் சிறப்பு கண்டவர்.

கற்றறிந்தவர்கள் அதிகமாக அரசியலில் பங்கேற்க வேண்டிய நேரம். எதிர்ப்புக்களைச் சமாளிக்க வேண்டிய மனத் துணிவு, திடம் இவை அனைத்துக்கும் மேலாக, தியாக உள்ளம் கொண்ட திரு. ஜி. கே. சுந்தரம் நாட்டின் தேவை உணர்ந்து செயல் ஆற்றுகிறார்.

இந்த ஆண்டு அவருடைய மணிவிழா ஆண்டு.

அவர் நற்பணிகள் தொடரவும் மேலும் பல்லாண்டுக் காலம் வளமாக வாழ்ந்து நாட்டு முன்னேற்றத்துக்குத் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளவும் வேண்டும் என்று தமிழ்ப் பெருங்குடி மக்கள் வாழ்த்துகிறார்கள்.

— ஆசிரியர்

தலைவர் :

C. R. வசந்தராகவன்

❖

கௌரவ ஆசிரியர் :

பா. ராமமூர்த்தி பி.காம்., பி.எல்.



# ‘முற்றுப் பருவத்தில் மூண்டெழுந்த தேசபக்தி!’

கம்பனடிப்பொடி (சா. கணேசன்)

‘சுந்தரம்’ என்ற சொல்லுக்கு அழகு, வண்ணம், நன்மை, மங்கலம் என்ற பல பொருள்கள் உண்டு. இத்தகைய நற்பொருள் தரும் சொல்லையே தம் பெயராகக்கொண்டு, வாழ்வாங்கு வாழும் அன்பர். **ஜி. கே. சுந்தரம்** அவர்கள் **14 — 10 — 1974**-ல் அறுபதாண்டு நிறைந்து மணிவிழாக் கொள்கின்றார்.

அன்பால், அறிவால், ஆன்ற குடிப் பிறப்பால், தெய்வ நம்பிக்கையால், தேசப் பற்றால், சிந்தையின் தெளிவால், சீலத்தால், தொழில்துறை ஊக்கத்தால், கலை ஆர்வத்தால், தொண்டுளத்தால், கொள்கைப் பிடிப்பால் அனைவரின் பாராட்டுக்கும் உரியவராயுள்ளவர்.

முற்றுப் பருவத்திலேயே மூண்டெழுந்த தேச பக்தியால் அறப்போர் ஆற்றிச் சிறை சென்றுயர்ந்த செம்மல். அன்று முதல்

மகாத்மா காந்தியடிகளின் அறம் கடைப்பிடித்து, மூதறிஞர் சத்திய ஞான தரும ஆசான் ரா்ஜாஜி காட்டிய வழியில் நற் பணியாற்றிவரும் நம்பி.

தொழிலதிபர் என்ருல் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் பெருமகன். முதலீட்டாளர்க்குப் போன்றே தொழில் புரிகுநர்க்கும் வளர்ச்சியில் பங்கு (Progress Sharing) வேண்டுமென்று வாதாடும் பரிவுடை நெஞ்சர். நாடு முன்னேற வேண்டுமெனில், அறிவு, செல்வம், உழைப்பு மூன்றும் இணைந்து, ஒன்றை ஒன்று தாக்காமல், தாங்கி நிற்க வேண்டும் என்ற மெய்யுணர்வுடையார்.

அறம் பிறழா நெஞ்சும், திறம் பிறழாச் செய்கையும் உடைய இவரை நாடு மதிப்பதிலும், நல்லோர் போற்றுவதிலும் வியப்பேதும் இல்லையன்ருே?

தனிமனித வாழ்வில் எது தருமமோ அதுவே தொழில், வாணிகம், அரசியல் முதலிய அனைத்திற்கும் தருமமாகும். அறம் என்பது இடத்திற்கொரு விதமாய் அமையாது; அமைவ தாகக் கருதப்படாது. சூடும், குளிர்ச்சியும், ஒளியும் எப்படி எங்கும் ஒரே தன்மையதாய் ஆதிமுதல் நின்று நிலவுகிறதோ அப்படித்தான் சத்தியமும், தருமமும் எல்லா இடத்தும் மாருமல், வேறுபடாமல் நிற்கிறது. இவற்றை உணர்த்தியவர் காந்தியடிகள். நமக்கெல்லாம் ஊட்டியவர் ராஜாஜி.

இத் தத்துவத்தை, தருமத்தைக் கடைப்பிடித்து வாழும் சிலருள்ளே திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் குறிப்பிடத்தக்க ஒருவர். இவர் மணிவிழாவை நாமெல்லாம் கொண்டாடுகிருேம் என்ருல் ஒரு தனி மனிதரையா கொண்டாடுகிருேம்? அல்ல; வையத்தில் வாழ்வாங்கு வாழும் பெருவாழ்வை, தருமநெறி கடைப்பிடித்து வாழும் ஒரு சான்ருண்மையை, சத்தியத்தால் ஈர்க்கப்படும் ஒரு சமரச தரிசனத்தை அல்லவா சுந்தர வடிவில் கண்டு களித்துக் கொண்டாடி மகிழ்கிருேம்!

'மகன், தந்தைக்கு ஆற்றும் உதவி, "இவன் தந்தை என்னோற்ருன் கொல்" என்னும் சொல்' என இலக்கணம் வகுத்தான் வள்ளுவப் பேராசான்.

திரு. குப்புசாமி நாயுடு அவர்கள் பெற்றுத் தந்த மணி விழாச் செல்வர் ஜி. கே. சுந்தரம் அவர்கள் அதற்கு ஓர் இலக்கிய மாய்த் திகழ்கின்ருர்.

இத்தகைய பெருமகனை, திருமகனை, நல்லோர் பலருடன் கூடி, யானும்,

மங்கையொரு கூறுடையாய்!
வலமார்பில் திருவுடையாய்!
வாணி கேள்வா!

உங்களருள் தினம்சொரிந்து
உயர்குணத்தான் சுந்தரத்தை
உவந்து காத்து

மங்கலங்கள் அவைநிரம்பி
மகிழ்பூத்து, பொலிவெய்தி
வளரச் செய்தே

இங்கினிது வாழ்க! என
இசைக்கின்றேன் பல்லாண்டு
இதயம் ஆர!







# வாழும் நெறி...

ஜஸ்டிஸ். எஸ். மகராஜன்

லெயோ டால்ஸ்டாய் (Leo Tolstoi) என்ற ஞானி ஒருவர் ரஷ்யாவில் வாழ்ந்தார். அவர் காலத்திலே ரஷ்யாவில் பிச்சைக் காரர்களுடைய தொல்லை அதிகம். மாஸ்கோ நகரத்தின் 24-வது சாலையிலே அவர் நடந்து சென்றுகொண்டிருந்தபோது, ஒரு பிச்சைக்காரன் அவரை வழி மறித்து, அவர் சட்டையைப் பிடித்து இழுத்து, "ஐயா, பிச்சை" என்று கேட்டான். டால்ஸ்டாய் இளக்கமான மனமுடையவர்; பரிவு நிறைந்தவர். பிச்சை கொடுக்க வேண்டும் என்ற ஆத்திரத்தில் தம் நீண்ட கையைச் சட்டைப் பைக்குள் விட்டுத் துழாவித் துழாவிப் பார்த்தார். பைக்குள்ளே ஒரு காசுகூட இல்லை. மனவேதனை யோடு பிச்சைக்காரனைப் பார்த்து, "பையிலே பணமில்லையே, தம்பி, பணமில்லையே" என்று சொன்னார். இதைக் கேட்டவுடன் பசியால் வதங்கிப் போயிருந்த பிச்சைக்காரன் முகத்திலே என்றும் இல்லாத ஓர் ஒளி பிறந்தது.

"பிச்சைக் காசு இல்லையென்பதற்காக நீங்கள் வருந்த வேண்டாம். பிச்சை கொடுப்பதைக்காட்டிலும் பெரிய உதவி யொன்றை நீங்கள் எனக்குச் செய்துவிட்டீர்கள், ஐயா. 'தம்பி', என்றல்லவா என்னை அழைத்துவிட்டீர்கள்! அது போதும்" என்று சொன்னான் பிச்சைக்காரன்.

கொஞ்சமும் தன்னை மதிக்காத இவ்வுலகத்திலே, தன்னையும் ஒரு உருப்படியாக மதித்துத் தம்பியென்று உறவு கொண்டாடிய

டால்ஸ்டாயிடத்திலே பிச்சைக்காரனுக்கு அளவு கடந்த மதிப்பு ஏற்பட்டுவிட்டது. கேவலம் பணத்தினுல் கிட்டாத மகிழ்ச்சியும் ஊக்கமும் பரிவினுல் கிட்டிவிடுகிறது.

உலகத்திலுள்ள துன்பங்கள் பலவற்றிற்கும் காரணமாக இருப்பது பரிவின்மைதான். அந்தப் பரிவைப் பெறுவது எப்படி? நாள்தோறும் கொஞ்ச நேரமாவது நம்மைப் பற்றிய சிந்தனை யினின்றும் நம்மை விடுவித்துக் கொண்டு, கூடு விட்டுக் கூடு பாய்ந்து, மற்றவர்களுடைய இதயத்தில் அமர்ந்து, அவர் களுடைய கண்கள் வழியாக உலகத்தைப் பார்க்க முயலுவோ மேயானுல், டால்ஸ்டாய்க்கு ஏற்பட்ட பரிவுணர்ச்சி நமக்கும் கைவரும்.

நியூயார்க் (New york) நகரத்திலேயிருந்த உள மருத்துவ நிபுணரிடத்திலே (psychiatrist) ஆலோசனை கேட்பதற்காக வந்தாள் ஒரு பெண். "நான் ஒரு தொழிற்சாலையின் தலைமை அலுவலரிடத்திலே சுருக்கெழுத்தாளராக வேலை பார்க்கிறேன். என்னுடைய அதிகாரி ஒரு சிடுமூஞ்சி. எனக்கு அவனுடைய கொடுங்கோன்மையை நினைத்தால் இரவில் தூக்கம் வருவதில்லை. வேலையை விட்டுவிட வேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்திருக் கிறேன். அதற்கு முன் உங்கள் ஆலோசனையையும் கேட்கலாமே என்று வந்தேன். என்ன சொல்லுகிறீர்கள்?" என்று பரபரப்போடு கேட்டாள்.

வைத்தியர் சொன்னுர்: "அம்மா, நான் ஒரு யுக்தி சொல்லுகிறேன். அதன்படி மூன்று மாதம் நடந்துவிட்டு மறுபடியும் என்னிடம் வா. பிறகு ராஜிநாமாவைப் பற்றிச் சிந்திப்போம்" என்ருர்.

அவர் சொன்ன யுக்தி இதுதான்: "சிடுமூஞ்சியிடத்திலும் சில நற்குணங்கள் பதுங்கிக்கொண்டிருக்கும். அவற்றைத் தேடிக் கண்டுபிடித்து, வாயார அவற்றைப் பாராட்டு. ஒரு நாளைக்கு ஒரு பாராட்டு என்று வைத்துக்கொள்" என்று சொல்லி அனுப்பினுர்.

இந்த ஆலோசனையை மேற்கொள்ளத் தலைப்பட்டாள் சுருக்கெழுத்துப் பெண். மறுநாள் சுருக்கெழுத்து எழுதுவதற் காக எஜமானனிடம் போனுள். அவன் அணிந்திருந்த சட்டை அழகாக இருந்தது. அதை உள்ளன்போடு பாராட்டினுள். அடுத்த நாள் அவனுடைய ஆங்கில எழுத்து நடையின் நுணுக்கத்தை உணர்ந்து பாராட்டினுள். இப்படியாக, பாராட்டு ஏற ஏற, எஜமானனுடைய சிடுமூஞ்சித்தனம் குறைந்து கொண்டே வந்தது.

கதையை வளர்ப்பானேன்! சிடுமூஞ்சியாய் இருந்தவன் காதலனுகிவிட்டான். மூன்று மாதங்கள் கழித்து மருத்துவரைப் பார்க்கச் சென்ருள் பெண்

"என்னம்மா, ராஜிநாமா பண்ண வேண்டியதுதானே?" என்று கேட்டார் அவர்.

"ஐயோ, ராஜிநாமாவா? என்னை அவர் நாளைக்குத் திருமணம் செய்துகொள்ளப் போகிருர். பாருங்கள் இதை" என்று சொல்லி அவர் பரிசாகக் கொடுத்திருந்த வைர மோதிரத்தைக் காட்டினுள். பரிவினுல் வந்த விளைவை அது டால் அடித்துக் காட்டிக்கொண்டிருந்தது.

நம்மைச் சுற்றியுள்ளவர்களிடத்தில், நம்மிடம் இருப்பது போலவே, பல குற்றங்கள் இருக்கலாம். அவற்றைக் கொஞ்ச நேரமாவது மறந்துவிட்டு, அவர்களிடம் இருக்கும் ஒரு துளி நல்ல குணத்தை முயன்று கண்டுபிடித்து, நாம் பாராட்டக் கற்றுக் கொள்ள வேண்டும். இந்தப் பழக்கத்தைக் கைக்கொண்டால், நம்மிடம் இருக்கும் பொருமை நம்மை விட்டு அகலும்; இங்கிதம் பெருகும்; சமுதாயத்தில் மங்களம் பொங்கும்.



**MEMBERS & STAFFS**

**OF CITY CLUB,**

**COIMBATORE,**

**OFFER THEIR**

**FELICITATIONS**

*To*

The President

*Sri. G. K. SUNDARAM*

*ON HIS 60th YEAR*



# தெளிவான சிந்தனை உரமான முடிவு

Prof : ஜி. ஆர். தாமோதரன் M. L. C.



மக்கள் வளமான வாழ்வு பெறத் துணையாய் இருப்பவை உழவும் தொழிலும் ஆகும். எனவேதான், "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்று பாரதி பாடினன். இந்த இரண்டினையும் தமிழகத்துக்கு மிகுதியாகத் தந்து வரும் மக்கள் கொங்கு நாட்டு மக்கள் ஆகும். பிற பகுதியில் காணப்படும் வளமான நிலமும் நீரும் இல்லை என்றாலும் தங்கள் உழைப்பால், விஞ்ஞான ரீதியாகப் பயிரிடும் திறத்தால், உழவுத் தொழிலில் முன் நின்று தமிழ்நாட்டுக்கு வழிகாட்டும் மக்கள் கொங்கு நாட்டு மக்களே. தொழில் வளர்ச்சியில் தமிழகம் இன்று பெற்றுள்ள சிறப்பிற்கு வித்திட்ட பெருமையும் கொங்குப் பகுதியையே சாரும். அதிலும் கோவை மாவட்டம் முன்னேடியாக விளங்கும்.

தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும் விஞ்ஞான ரீதியாக உழவுத் தொழில் வளர்ச்சிக்கும் வித்திட்ட கோவை மாவட்டத்தினைச் சேர்ந்த குடும்பங்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். இந்தக் குடும்பத்தவர்கள் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் செய்து வந்த, செய்து வருகின்ற நற்பணிகளின் காரணமாகத் தான் கோவை மாவட்டத்தில் இன்று பதினெட்டுக் கலைக் கல்லூரிகளும் ஐந்து பாலிடெக்னிக்குகளும் மூன்று எஞ்சினீயரிங் கல்லூரிகளும் ஒரு விவசாயப் பல்கலைக் கழகமும் இயங்குகின்றன; பல நூற்பு ஆலைகளும் எஞ்சினீயரிங் தொழிலகங்களும் செயல்படுகின்றன. அத்தகைய குடும்பங்களில் ஒன்று கோவை பாப்பநாய்க்கன்பாளையத்தினைச் சேர்ந்த திரு. ஜி.குப்புசாமிநாயுடு அவர்களின் குடும்பமாகும்.

திரு. ஜி குப்புசாமி நாயுடு அவர்களின் அரும்பெரும் மக்கள் திருவாளர்கள் ஜி. கே. தேவராஜுலு, ஜி. கே. சுந்தரம், ஜி. கே இராஜகோபால், அமரர் ஜி. கே. மணி (ஜி. கே. கோவிந்தசாமி) ஆகியோரைத் தமிழகத்து மக்கள் மட்டுமின்றி பாரத நாட்டுத் தொழில் உலகமும் அரசியல் உலகமும் நன்கறியும். திரு. ஜி. கே. தேவராஜுலு அவர் தம் கூர்ந்த மதியும் முன்னேக்கி அறியும் திறனும் எல்லாரும் அறிந்தவை அவர் நல்ல கைராசியும் செயல் திறனும் மிக்க பெரியார்; கடவுள் பக்தியும், பார்ப்பதற்குக் கடுகடுப்பாய்த் தோன்றினலும் கருணை உள்ளமும் கொண்ட நல்லார். இவர்க்கு வாய்த்த இளவல்கள் இராமனுக்கு வாய்த்த அருந் தம்பியர்களைப் போன்று அண்ணனுக்கு நிழலாய் நின்று எல்லா நிலைகளிலும் ஒத்து உதவி உயர்ந்த நிலைகளை உண்டுபண்ணும் இயல்பினர். அந்த ஒற்றுமையும் உயர்ந்த ஒத்துழைப்பும் விளங்கும் காரணத்தால்தான் சிறிய ஜின்னிங் ஃபேக்டரியைத் தொடங்கிய திரு. ஜி. குப்புசாமி நாயுடு குடும்பத்தவரால் நவீன மயமாக்கப்பட்ட பல பஞ்சாலைகள், பஞ்சாலைகளுக்கான இயந்திரங்களைச் செய்யும் மெஷின் ஒர்க்ஸ், ரேயான் நூற்பு ஆலை, பள்ளிகள், கல்லூரிகள், தாய்சேய் மருத்துவமனை ஆகிய பலவற்றைத் தொடங்கியும் ஆண்டவனுக்கான ஆலயங்கள் பல கட்டியும் மக்கட்குத் தொண்டு செய்ய முடிகின்றது. அந்த ஒற்றுமையும் ஒத்துழைப்பும் ஓங்க ஆண்டவன் அருள் புரிவாராக.

இத்தகைய ஒத்துழைப்புக்கு நல்லதொரு ஆணிவேராய் அமைந்து செயல்படுபவர் "மேம்பாலம்" அக்டோபர் இதழை அலங்கரிக்கும் மணிவிழாச் செல்வர் திருவாளர் ஜி. கே. சுந்தரம் அவர்கள் ஆவார்கள். நண்பர் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் சிரித்த முகமும் எதனையும் வெளிப்படையாகப் பேசும் இயல்பும் உடையவர்; அரசியல் துறையில் ஆழ்ந்து சிந்திக்கும் அரும் பண்பினர்; கொண்ட கொள்கையில் உரமான நம்பிக்கை உடைய திறவோர்; நாட்டு விடுதலை இயக்கத்திலும் சத்தியாக்கிரகத்திலும் ஈடுபட்ட இவரைக் கைது செய்து கோவைச் சிறையில் அடைத்தனர். அச்சிறை வாசத்தினை அஞ்சாது, அன்போடு ஏற்ற விடுதலை இயக்க வீரர்; எளிமையைத் தழுவி ஏற்கும் இயல்பினர்; தொழில் வளர்ச்சி சீராக வளர்ந்து வளர்ச்சியின் பயன் எல்லார்க்கும் முறையாகக் கிடைக்கவேண்டும், அப்போது தான் நாடு முன்னேறும் என்ற திறமான கோட்பாடு கொண்ட உரவோர்; மக்கள் நலன் நாடும் நல்லார்; அரசியலில் ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சார்ந்திருந்தாலும் மற்ற கட்சிக்காரர்களிடம் நட்போடு பழகும் இயல்பினர்.

பிறர் கருத்துக்களை மதித்து நல்லனவற்றை ஏற்றுக்கொள்ளும்

தன்மையர். திருவாளர் ஜி.கே.டி. அவர்களுக்கு இவர் அளித்த ஊக்கத்தால்தான் மணி உயர் நிலைப் பள்ளியும் மருத்துவ மனை யும் கல்லூரியும் தோன்றின என்பதனை இங்கு நினைவுகூர்தல் வேண்டும்.

திருவாளர் ஜி. கே. எஸ். அவர்கள் நல்ல விளையாட்டு வீரர். கோவை யில் ஹாக்கி, கால்பந்து, கிரிக் கெட் போன்ற விளையாட்டுக் கழகங்கள் தோன்றவும் வளரவும் கோவை அத்தலிட்டிக் அசோசி யேஷன் தோன்றவும் செயல் படவும் மூல காரணமாய் இருந்தவர் ஜி. கே. எஸ். குறி தவருது துப்பாக்கி சுடுவதிலும் குதிரைச் சவாரியிலும், பிரிட்ஜ் போன்ற விளையாட்டிலும் மிகுந்த தீரர். கோவை மாவட்ட அள விலும், மாநில அளவிலும், தேச அளவிலும் நடைபெற்ற பிரிட்ஜ் விளையாட்டுப் போட்டியை அமைத்ததில் இவருக்குப் பெரும் பங்கு உண்டு.

இவரோடு பழகிய நண்பர்களை என்றும் கைவிடமாட்டார். நண் பர்கள் தவறு செய்துவிட்டாலும் அவர்களுக்கு வேண்டும்போது வேண்டிய உதவிகளை அஞ்சா மலும் மன மகிழ்வோடும் செய்வார் என்பதனை நண்பர் உலகம் அறியும்.

இலக்கியத்திலும் இசையிலும் ஜி.கே.எஸ். அவர்கட்கு நிறைந்த ஈடுபாடு உண்டு. கோவை கம்பன் கழகம் தோன்றிச் செயல்படக் காரணமாயிருந்தவர் திருவாளர் ஜி. கே. எஸ். இந்தக் கழகம் நடத்திய கம்பன் விழா நிகழ்ச்சி களைக் கோவை மக்கள் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தனர். இலக்கிய ஆர்வத்தின் காரணமாகத்தான் கோவை பாரதீய வித்யா பவனின் கோவைப் பிரிவின் தலை வராக இவர் இருந்துவருகின்ருர். தெளிவாகச் சிந்திப்பதிலும் முடிவில் உரமாக இருப்பதிலும் இவருக்கு ஈடு இவரே ஆகும்.

இவர்க்கு உயிர்களிடத்தில் மிகுந்த அன்பு உண்டு. பறக்கும் பறவைகளும்,ஓடும் விலங்குகளும், நீந்தும் மீன்களும், மலரும் பூக்களும் இவர் அன்பிற்கு உரியன. இவைகளை உணர்ந்து, நோக்கி ஈடுபட்டு மகிழும் உள்ளம் இவர்க்கு உண்டு.

நான் இங்கிலாந்து நாட்டில் எஞ்சினியரிங் துறையில் கல்வி பயின்றபோது நண்பர் ஜிகே எஸ் அவர்களும் மான்சஸ்டர் அருகில் உள்ள போல்டனில் டெக்ஸ்- டைல் டெக்னலஜி கல்வி பயின் ருர். அப்போது, கோவையில் இருந்து சென்றவர்கள் என்ற முறையிலும் நண்பர்கள் என்ற முறையிலும் அவ்வப்போது ஒருவரையொருவர் சந்தித்து ஊர் பற்றியும் நாட்டு விடுதலை பற்றியும் உரையாடுவோம். இவரைப் பற்றிக் காலஞ் சென்ற திரு. ஜி. டி. நாயுடு குறிப்பிடு கையில் கோவையிலிருந்து மேலை நாடு சென்று ஊர் சுற்ருமல் கல்வி பயின்று பட்டம் பெற்று வந்த சிலரில் திரு. சுந்தரமும்

ஒருவர் ; அதனுல் இவரைத் தமக்கு நன்கு பிடிக்கும் என்று குறிப்பிட்டுள்ளார்.

கடமையில் கண்ணுனவர் திரு. ஜி. கே. எஸ். அரசியல் யாருக்கு என்ன நன்மையைச் செய்ததோ இல்லேயோ, திரு. ஜி. கே. எஸ். அவர்களேப் பொறுத்தவரை ஒரு பெரிய நன்மையைச் செய்துள் ளது. முன்பெல்லாம் யாரோடும் கலகலப்பாகப் பழகமாட்டார். அரசியலில் ஈடுபட்ட பின்னர் கலகலப்பாகப் பேசும் ஆற்றலேப் பெற்றுள்ளார்; மேடைகளில் சரமாரியாகக் கருத்துக்களே எடுத்துச் சொல்லும் வல்லமையைப் பெற்றுள்ளார்.

இவ்வாறு பல நல்லியல்புகளேயும் சிறப்பு அம்சங்களேயும் பெற்றுள்ள தொழிலதிபர் மணிவிழாச் செல்வர் ஜி.கே சுந்தரம் அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து நாட்டுக்கு உரிய நல்ல பல பணிகளே மேலும் மேலும் செய்ய எல்லாம் வல்ல இறையருள் கூடுவதாக!









# GKS

## *A PROFILE*

| | |
|---|---|
| **Birth:** | Born at Pappanaickenpalayam on 29th May, 1914, the second son of Sri G. Kuppuswamy Naidu. |
| **Education:** | Studied at the Sarvajana High School, Peelamedu and Government Arts College, Coimbatore. |
| | Took his B. Sc. (Textile Technology) in the Municipal College of Technology, Bolton (U. K.) |
| | Returned from U. K. in 1939. |
| **Marriage:** | Married to Neelaveni Thayarammal in July 1939. |
| **Services:** | Participated in the 1930 Salt Satyagraha at Vedaranyam lead by Rajaji courted arrest and underwent imprisonment for six months. |
| | An ardent follower of Gandhiji and believer in his principles. |
| | Joined Swatantra Party in 1959 |
| **Past Member:** | Rajyasabah [1966 to 1972] |
| **President:** | The Tamil Nadu Swatantra Party. |
| **Chairman:** | Indian Cotton Mills Federation. |
| **President:** | Indian Chamber of Commerce, Coimbatore. |

| | |
|---|---|
| **Vice-President :** | South India Textile Research Association [SITRA] |
| **Past Chairman :** | South India Mill Owner's Association |
| **Managing-Director :** | M/s. Lakshmi Mills Co. Ltd. Coimbatore. |
| | M/s. Coimbatore Cotton Mills Ltd. |
| **Director :** | Lakshmi Machine Works Ltd. |
| | Lakshmi Card Clothing Mfg. Co. Private Ltd. |
| | Lakshmi Textile Exporters [P] Ltd. |
| | South India Viscose Ltd. |
| | United Bleachers Ltd. |
| | Vijayeswari Textiles Ltd. |
| **Managing-Trustee :** | G. Kuppuswamy Naidu Memorial Hospital, Coimbatore. |
| **Managing-Trustee** | Mani High School, Coimbatore. |
| **President :** | Bharathiya Vidhya Bhavan, Coimbatore Kendra. |
| **President :** | Hindi Prachar Sabha, Coimbatore. |
| **President :** | Photographic Society, Coimbatore. |
| **President :** | Cosmopolitan Club, Coimbatore |
| | Coimbatore City Club |

**VISITS ABROAD :**

Travelled widely all over the globe in his own and as a member of various delegations.

As a member of the industrialist, Goodwill Delegation to Africa headed by the late Sri A. M M. Murugappa Chettiar he visited Kenya, Ghana, Ethiopia, Nigeria and Sudan in 1964.

He has also headed a delegation to Hongkong and Bangkok for promoting exports of yarn.

He participated in the International Management Seminar at New York.

| | |
|---|---|
| Sons : | S. Pathy, B. Com. |
| | S. Karivaradhan (B. E. IV Year) |
| Daughter : | Sunitha Shantaram |
| Son-in-law: | Shantaram |





ஜி. கே. எஸ்.  ராஜாஜி  என். ஜி. ரங்கா

வாழ்க்கை வாழ்வதற்காகத்தான்; அதுவும் சீராக வாழ்வதற்கே!

—ராஜாஜி



யார் முதல்வரானாலும், எந்தக் கட்சி ஆட்சியில் இருந்தாலும், அதன் நல்ல திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு உதவ வேண்டும். அரசினரால் மட்டும் எதுவும் செய்துவிட முடியாது.

— அறிஞர் அண்ணா







நம் தலைமுறைக்கு வழிகாட்ட காந்தி மகான் இருந்தார். இன்று அவரைப் போல வழிகாட்ட யார் இருக்கிறார்கள்? அடுத்து வரும் தலைமுறையினரின் நல் வாழ்வு பற்றிச் சிந்திக்க வேண்டாமா?

— காமராஜ்





ஒரு நாட்டின் செல்வம் அந்நிய நாட்டு உதவிகள் மூலம் அதிகரிக்க முடியாது. அந்த நாட்டு மக்களின் ஒயாத உழைப்புத்தான் வறுமையைப் போக்கி வளப்பத்தைத் தரும்.

— ஒய். பி. சவான்



தெளிவான மனச்சாட்சியுடன் சேவைக்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்டு விட்டவருக்கு, நாளுக்கு நாள் அதன் அவசியம் அதிகமாகத் தோன்றும்.

— எல்லைக் காந்தி



# வாழ்க்கை கற்றுக் கொடுத்தது என்ன?

பேட்டி ; B. ராமமூர்த்தி பி. காம்., பி. எல்.

உங்கள் மணிவிழா ஆண்டில், 'மேம்பால'த்தின் சார்பில் எங்கள் உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்!

1. வாழ்க்கையில் வெற்றி கண்ட சிலரில் தாங்களும் ஒருவர் என்று பொதுமக்களால் கருதப்படுகிறீர்கள். வாழ்க்கை தங்களுக்குக் கற்றுக் கொடுத்தது என்ன?

ஏதோ நான் அடைந்த சிறு வெற்றிகளை மிகைப்படுத்திக் கூறுகிறீர்கள். உங்கள் வாழ்த்துக்களுக்கு நன்றி.

காந்தீயத் தத்துவங்கள், ராஜாஜியின் அறிவுக் கருத்துக்கள் பலரையும் சிந்திக்கத் தூண்டியது போலவே, என்னையும் கவர்ந்தன. ஆன்ம சக்தியை உலகுக்கு வெளிப்படுத்திய பெருமை நாட்டுத் தந்தை காந்திஜிக்கே உரித்தானது. இந்த ஆன்ம பலத்தை உணர்ந்துகொண்டோமேயானால் வாழ்க்கையில் சந்திக்கின்ற துன்பங்களை, உறுதியோடும் தளர்வின்றியும் அநுபவிக்கும் மனப்பாங்கு வளர்ந்து விடுகிறது. இந்த இடர்களே காலப் போக்கில் இன்பத்தின் ஊற்ருக மாறிவிடுகின்றன. இந்த உண்மையை சிறைத் தண்டனை அநுபவித்தபோது உணர்ந்து கொண்டேன்.

மிகவும் சாதாரண செயல்களை மனிதன் கவனிப்பதில்லை. நாம் விடும் மூச்சு, உண்ணும் உணவு, நீரைவிட முக்கியமானது. நாம் எப்பொழுதுமே மூச்சுவிட்டுக் கொண்டிருப்பதால் அதில் கவனம் செலுத்துவதில்லை. அதைப் போலத்தான் வாழ்க்கைக்கு இன்றியமையாதது சத்தியம்; அதைத் தீவிரமாகக் கடைபிடிக்கும் ஒழுக்கம். இவை இரண்டின் குணநலன்களை உணர நடத்தத் தோன்றும் எளிமையான வாழ்க்கை. இவைகளைப்பற்றி எவ்வளவு சிந்திக்கிறோமோ அவ்வளவுக்கு அதன் தன்மைகளைத் தெரிந்து கொள்கிறோம்.

ஒரு லட்சியம் உன்னதமாக இருக்கலாம். ஆனால் அதை அடையக் கடைபிடிக்கும் வழிமுறைகளும் தூய்மையாக இருக்க வேண்டும் என்பது மிக மிக அவசியம். இவை இரண்டும் இணைந்து செயல்படும்போது அது ஓர் இறைப் பணி ஆகிறது.

இறைப் பணி என்றுமே தோல்வி கண்டதில்லை.

**End will not Justify means** என்னும் கொள்கையில் நான் திட உறுதி உள்ளவன்.

அன்றாடம் நடத்தும் சாதாரண வாழ்க்கையிலிருந்து தொழில், அரசியல் முடிய இந்தத் தத்துவம் பொருந்தும். நடைமுறையில் சில சிரமங்கள் இருக்கலாம்; உங்கள் குறிக்கோளை அடைவதில் தாமதம் ஆகலாம். இருந்தபோதிலும் வெற்றி என்பது நிச்சயமே; நிரந்தரமானதும் கூட. இதுவே நான் வாழ்க்கையில் கற்றுக் கொண்ட மிக முக்கியமான பாடம்.

**2. ராஜாஜியைப் பற்றித் தங்களுடைய சீரிய கருத்துக்களை அறிய விரும்புகிறோம்.**

எனக்கு அவர்மீது மிகுந்த ஈடுபாடும் அளவற்ற மதிப்பும் உண்டு. அவருடைய தீர்க்க தரிசனத்துக்கு எதையும் இணையாகக் கூறமுடியாது. நாட்டின் நன்மையும், மக்களின் நல்வாழ்வும் முன்னேற்றமுமே அவருடைய லட்சியம். அவர் பட்டி தொட்டி களில் அதிகமாகச் சுற்றியதில்லை. இருந்த போதிலும் அவருடைய சுற்றுப் பயணங்களில் பேசுகின்ற ஓரிரண்டு பேச்சுக்கள், மக்கள் கூறுகின்ற ஓரிரு குறைகள் இவற்றிலிருந்து அவர்கள் எவ்விதமான வாழ்க்கை நடத்துகிறார்கள் என்பதை எளிதில் கிரகித்துக் கொள்வார்.

சென்னையில் அமர்ந்தபடி, ஏதோ மூலையில் நடக்கும் ஏழைக் குடியானவன் வாழ்க்கை– டில்லியில் நடைபெறும் நிர்வாகத்தின் தன்மை இவற்றை உள்ளுணர்வினால் சரியாகப் புரிந்து கொள்ளும் ஆற்றல் அவருடைய தனித் தன்மை.

எந்தச் செயலே ஒருவரால் நிறைவேற்ற முடியும் என்று அவர் முடிவெடுத்தாலும் உறவு, கட்சித் தொடர்பு, முன் பழக்கம் இவற்றையெல்லாம் ஒதுக்கிவிட்டு, நிர்த்தாட்சிண்யமாக அவர் நடந்து கொள்வார். இந்த ஒரு காரணத்துக்காகவே அவர் பல விரோதிகளைச் சம்பாதித்துக் கொண்டார். எனினும் அவருடைய முடிவு சரியாக இருந்ததைப் பின்னல் அநுபவத்தில் நான் கண்டு கொண்டேன்.

**3. பணவீக்கமும் அகவிலே உயர்வும் சாதாரண மக்களேயும் நாட்டின் பொருளாதாரத்தையும் பெரிதும் பாதித்து வருகிறதே! இதனுல் ஏற்பட்டுள்ள இன்னல்கள் தீரத் தாங்கள் கூறும் பரிகாரங்கள் என்ன?**

இந்த நிலேக்குச் சுதந்திரா கட்சி கூறும் வழிகள்தான் நிலேயான தீர்வுகளேக் காணும். நான் ஏதோ அரசியலேப் புகுத்துகிறேன் என்று நினேத்து விடாதீர்கள். 'கூறுகின்ற கருத்துக்கள் சரியானவையா? ஏற்றுக் கொள்ளக் கூடியவையா? காலத்துக்குப் பொருந்துகிறதா?' என்று ஆலோசித்து ஏற்றுக்கொள்ளுங்கள்.

சர்க்காரிலும், பொதுத் துறையிலும் ஆடம்பரச் செலவுகளேக் குறைத்துச் சிக்கனம் கடைப்பிடித்தல், நிர்வாகத்தில் பற்ருக்குறை பட்ஜெட்டைத் தவிர்த்தல், இறக்குமதியாகும் பொருள்களுக்கு உள்நாட்டிலேயே மாற்றுப் பொருள்களேத் தயாரித்தல், சுதேசித் தொழில்களுக்கு ஊக்கம் அளித்து உற்பத்தியைப் பெருக்குதல், லேசென்ஸ் முறை, கட்டுப்பாடுகளே நீக்குதல். இவை சில வழி வகைகள்.

பத்தாண்டுகளுக்கு முன்பே சர்க்கார் கவனத்தை, சுதந்திரா கட்சி ஈர்த்து, இந்தக் கொள்கைகளேத் தீவிரமாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்று வலியுறுத்தியது. இருந்தும் இப்படிப்பட்ட ஆக்க ரீதியான யோசனேகள் புறக்கணிக்கப்பட்டன.

இன்று பணவீக்கம் நம்முடைய எல்லா முன்னேற்றங்களேயும் அழித்துவிட்டது. விலேயேற்றம் என்ற காரணத்தால் ஊதியங்கள் உயர்த்தப்பட்டன. ஊதிய உயர்வினுல் பொருள்கள் விலேயேறின. ஆக இப்படி ஒன்றுக்கொன்று ஏற்பட்ட போட்டி நம் நாட்டுப் பொருளாதாரத்தைச் சீர்குலேத்து விட்டது.

இன்று சர்க்காரும் அரசியல்வாதிகளும் முன்பு நாங்கள் எதைச் சொன்னேமோ அதைத்தான் உரக்கக் கூவி வருகின்றனர்.

ஒரு விதி இருக்கிறது. பணவீக்கத்தின்போது இரு மடங்கு உழைப்பு வேண்டும். ஆனுல் நம் நாட்டுச் சூழ்நிலேயில் நான்கு மடங்கு உழைப்பு இருந்தாலன்றிப் பணவீக்கம் நம்மை முந்திச் சென்றுவிடும். பொருளாதாரம் பின்தங்கிவிடும்.

4. கடந்த சில ஆண்டுகளாகவே தொழிற் துறையில் ஒரு தேக்க நிலை ஏற்பட்டிருப்பதாகப் பொதுமக்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். இதைப்பற்றித் தங்கள் கருத்தும் தீர்வும்.

இன்று நம் நாட்டில் தொழில் வளர்ச்சி சதவீதத்தில் கூற வேண்டுமானால் ஒரு சதவீதம் கூட அல்ல; 0·9 சதவீதமேயாகும். இனி அது கூடிய சீக்கிரத்தில் 'மைனஸி'ல் போக இருக்கிறது. இன்றைய சட்டங்களுக்கும், கட்டுப்பாடுகளுக்கும், வரிகளுக்கும் ஈடுகொடுத்துப் புதியதாகத் தொழில் நடத்த முடியாத சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது தொழிலதிபர்கள், பண வசதி படைத்தவர்கள் என்றாலே வேண்டப்படாத பிரிவினராகக் கருதும் அளவுக்கு ஓர் எண்ணத்தை உருவாக்கி வருகிறார்கள்.

மலேஷியா, இலங்கை போன்ற அயல் நாடுகள் இன்று நம் நாட்டில் உள்ள பல தொழில் விற்பன்னர்களை, அவர்கள் நாட்டில் தொழிற்சாலைகளை அமைக்கும்படி அழைக்கிறார்கள். பல சலுகைகளையும் காட்டுகிறார்கள். ஆக அந்தப் புதிய தொழிற் கூடங்களை இங்கேயே உருவாக்க முடியாதா? கணக்கற்றவர்களுக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்க முடியும். உற்பத்திப் பெருக்கம் செய்து, தன்னிறைவை நோக்கிச் செல்ல முடிந்தாலும் இந்தத் திறமைகளை நம் அரசாங்கம் பயன்படுத்திக்கொள்ள மறுக்கிறது. இதை நான் மிக்க வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது.

5. லட்சுமி கூட்டு நிறுவனங்களின் மகத்தான வளர்ச்சிக்கு அடிப்படையான அம்சங்கள் என்ன என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

பிரமாதமான ரகசியம் எதுவும் இருப்பதாக யாரும் கருத வேண்டியதில்லை. நாங்கள் நன்றாகத் தேர்ச்சியும் அநுபவமும் பெற்ற தொழிலிலேயே முழுக் கவனத்தையும் செலுத்துகிறோம். சிமெண்ட், காகிதம் போன்ற இதர தொழில்களை நடத்த முன் வரும்படி சர்க்கார் எங்களைக் கேட்டிருந்தது. இருந்தபோதிலும் முன் அநுபவம் இல்லாத காரணத்தால் அவைகளை நாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. எங்களுடைய வெற்றிக்கு மற்றோர் காரணமும் உண்டு. லாபம் என்றாலே ஓரளவு Risk எடுத்தே ஆக வேண்டும். எங்கள் லட்சுமி நிறுவனங்களை நிர்மாணித்ததில் Calculated Risk எடுத்துக் கொண்டோம். ஆனால் Speculative Risk-ல் நாங்கள் ஈடுபடுவதில்லை.

எங்களுடைய எல்லா நிறுவனங்களிலும் தொழிலாளர்–முதலாளி உறவு சுமுகமாக இருப்பது குறிப்பிடத் தக்கது.

6. திரு குப்புசாமி நாயுடு அறக் கட்டளை நடத்தும் மருத்துவ நிலையத்தில் புகுத்தப்பட்டிருக்கும் நவீன சிகிச்சைகள் என்ன?

மனிதனின் வாழ்க்கை காலத்துடனும் நேரத்துடனும் போராடியபடி இன்றிருக்கிறது. இதன் காரணமாக மக்களிடையே இருதய நோய் பரவலாக இருப்பதைக் காண்கிறோம். இருதய நோய் சிகிச்சைக்காகச் சென்னைக்கும் வேலூருக்கும் சென்று கொண்டிருந்தார்கள். இன்று திரு. குப்புசாமி நாயுடு நினைவு வைத்திய மனையிலேயே Cardiac Intensive Care Unit-ம் E. C. G. வசதியும் செய்யப்பட்டிருக்கிறது. சமீபத்தில் இருதய அறுவைச் சிகிச்சைகள் இங்கே வெற்றிகரமாக நடந்திருக்கின்றன.

கான்சரைப் பொறுத்த வரையில் கோபால்ட் 60 டெலி தெரப்பி இங்கேயே கொடுக்கப்படுகிறது. நடப்பு ஆண்டில்கூட கான்சர் வார்டில் 30 படுக்கைகள் அதிகரிக்கப்பட்டிருக்கின்றன. தற்சமயம் டில்லியிலிருந்து இந்த மருத்துவ மனையில் கொடுக்கப் படும் நவீன சிகிச்சை முறையைப் பயின்று கொள்ள பயிற்சியாளர்களை அனுப்பி இருக்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.



# தெரிந்தது நாட்டு நடப்பு; தெரியாதது வீட்டு நிலைமை

திருமதி. சுநீதா சாந்தாராம்

நிமிர்ந்த நடை. நேர்கொண்ட பார்வை. சாந்தமான முகம். நிதானமான பேச்சு. தம் கருத்தைப் புகுத்தாது, கலந்தாலோசித்து, எதையும் முடிவெடுக்கும் மனப்பாங்கு. இதுதான் என் தந்தை திரு. G. K. சுந்தரம்.

அவர் மீது எனக்கு அளவு கடந்த அன்பு, அபிமானம். யாருக்குமே இருக்கும் இயற்கை உணர்ச்சிதான். இருந்தபோதிலும் அதே அளவிற்கு அவரைக் கண்டால் பயமும் கூட. முறையாகவும் ஒழுங்காகவும் எதையும் செய்யவேண்டுமென்ற அவர் கண்டிப்பு தான் இதற்குக் காரணம்.

நாம் செய்வதில் குறையிருந்தால் என்ன செய்வது என்ற பீதியால்தான், அன்பையும் மீறி இந்த பயம் மேலோங்கி நிற்கிறது.

நான் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த காலம். வீட்டில் ஓர் உறவினரைக் கோபமாகவும், மரியாதைக் குறைவாகவும் திட்டிவிட்டேன். வேறு அறையில் இருந்து கேட்டுக்

கொண்டிருந்த தந்தை, என்னை அழைத்து, நான் நடந்துகொண்ட முறையைக் கண்டிக்கும் வகையில் பிரம்பினுல் கைகளில் விளாசி விட்டார். நான் அழுதும், அடிகள் விழுவது நிற்கவில்லை. அந்த நேரத்தில் எனக்கு அளித்த தண்டனை அதிகமாகவே பட்டது.

சிறிது நேரத்தில் என்னை அழைத்து 'திருக்குற'ளை எடுத்து வரச் சொன்னுர்.

"தீயினுல் சுட்டபுண் உள்ளாறும்; ஆறுதே
நாவினுல் சுட்ட வடு"

இந்தக் குறளை மெதுவாகப் படித்தார். பல மேற்கோள்களைக் காட்டினுர். என் பிஞ்சு உள்ளத்தில் பதியுமாறு சுமார் ஒரு மணி நேரம் விளக்கினுர். ஏற்றத் தாழ்வின்றி யாரிடமும் இன்சொல் கூறுவதையே வலியுறுத்தினுர். இப்பொழுது அவர் அடிக்கவில்லை. இருந்தபோதிலும் நான் அழுதேன். மனம் உருகி அழுதேன். மற்ற வர்களிடம் பழகும் மனப்பாங்கை அன்றுதான் நான் கற்றுக் கொண்டேன்.

எனது பாட்டனுர், மறைந்த திரு குப்புசாமி நாயுடுவைத் வாழ்க்கை குருவாகவும்,மேதை ராஜாஜியை அரசியல் குருவாகவும் என் தந்தை வரித்துக் கொண்டார். வீட்டில் கூட வரவேற்பு அறையில் ராஜாஜியின் பெரிய உருவப் படம் சந்தன மாலைபோட்டு அலங்கரிக்கப்பட்டிருப்பது, யாருடைய கவனத்திலிருந்தும் தப்பாது. அவருடைய தலைமையில் உப்பு சத்தியாக்கிரகத்தில் பங்கேற்று ஆறுமாத சிறைத் தண்டனை பெற்ற விடுதலை வீரர்.

ராஜாஜி அவர்களுக்கு அனுப்பும் பல கடிதங்கள் அவர் சொல்ல நான் எழுதியதுண்டு. அதை டைப் செய்து, திருத்தி, செம்மைப்படுத்திக் கொடுத்தாலும், என் தந்தை மிகக் கவனமாக ஊன்றிப் படிப்பார். அரைப் புள்ளி, முற்றுப் புள்ளி கூட ராஜாஜிக்குச் சரியாக இருக்கவேண்டும் என்று என்னிடத்தில் அவர் பல தடவையும் கூறியதுண்டு.

தூதுக் குழுக்களிலும், தொழில் ரீதியிலும் அவர் அயல்நாடு களுக்குப் பறப்பது சகஜம். நம் நாட்டில் கிடைக்காத அதிசயப் பொருள்கள், சில ஆடம்பரமானவைகள் வாங்கி வருவது என்பது எவருக்குமே எழும் இயற்கையான வேட்கை. ஆனுல் என் தந்தை இதற்கு ஒரு விதி விலக்கு. ஒரு பொருள் தேவையல்ல என்ற நிலையில், அது வேண்டாத பொருளாகிறது என்பதே அவருடைய சித்தாந்தம்.

ஆனாலும் பேரக் குழந்தைகளுக்கு வாங்கி வருவார்; யூகித்து சொல்லுங்கள் என்றால், உங்களால் நிச்சயமாகக் கூறமுடியாது.

இரண்டு சாக்லெட்டுகள்! அதுவும் வாங்கியது அல்ல. விமானத்தில் பயணிகளுக்குச் சுவைப்பதற்காகத் தருவது. அதைப் பத்திரமாக வீட்டிற்கு கொண்டுவந்து சேர்த்து, குழந்தைகளுக்குத் தரும் அழகே தனி!

சிற்பங்களையும், ஓவியங்களையும் மணிக் கணக்கில் பார்த்து ரசிப்பது இவருடைய அலாதியான குணம். தந்தையோடு, நானும் அயல் நாட்டுக்குச் சென்றிருக்கிறேன். ரோம் நகரத்தில் மைக்கி லேஞ்சலோவின் சிற்பங்களை, கலை நுணுக்கத்தோடு எனக்கு விளக்கினார்.

சமீபத்தில் அண்ணா சாலையில், குதிரைச் சிலை ஒன்றை அமைத்து, திறப்பு விழா நடத்தியது யாவருக்கும் தெரிந்ததே! அண்மையில் சென்னை சென்றபோது, விடுதிக்கும்கூடப் போகாமல் என் தந்தை அந்தக் குதிரைச் சிலைக்கு முன்பு போய் நின்றபடி கலைஞனின் கைவண்ணத்தை வெகுவாகப் பாராட்டினார்.

ஸ்வாமி சின்மயானந்தா கோவை விஜயம் செய்திருந்த சமயம். கீதை தொடர் சொற்பொழிவுகள் நடந்துகொண்டிருந்தன நாள் தவறாது சுவாமிஜியின் உரை கேட்கப் போவார். குறிப்புகளை எடுத்துக் கொண்டுவந்து வீட்டில் விரிவாக்கிக் கொள்வார். இவைகளை என்னிடத்தில் தந்து, பொருள் புரிந்தது என்றால், என்னுடன் கூட வா; இருந்தாலும் நீ வரவேண்டும் என்ற நிர்ப் பந்தமில்லை என்று கூறுவார்.

ஒருமுறைக்கு, இருமுறை படிக்க, ஓரளவு எனக்கும் தெளிவு ஏற்பட்டு, தந்தையுடன் தவறாது சென்றேன். தொடர்ந்து, கேட்டு, பலனடைந்த மக்கள் எண்ணிக்கையில் நாங்களும் இருவர்.

வீட்டிலிருக்கிறார் என்று பெயரே தவிர, எப்பொழுது பார்த் தாலும் அவரைப் பார்க்க, பலபேர் வந்து போய்க்கொண்டே இருப்பார்கள். நாங்கள் யாராவது பேசவேண்டுமென்றால் கூட காத்திருக்க வேண்டியதுதான். சாப்பிடும் சமயம் பேசினால்தான் உண்டு. ஒரு ரகசியத்தை வெளியிடுவதற்கு என் தந்தை, என்னை மன்னிக்க வேண்டும். அவருக்கு நன்றாகத் தெரிந்தது நாட்டு நடப்பு; தெரியாதது வீட்டு நிலைமை.



# பிரார்த்தனை செய்ய அனுமதியுங்கள்

1930 மே பன்னிரண்டாம் தேதி நடுநிசி. தண்டி உப்புச் சத்தியாக்கிர கத்தின் சிக்கலான கட்டம் நெருங்கி விட்டது. சூரத் ஜில்லா மாஜிஸ்டிரேட், கைத் துப்பாக்கியுடன் இரு இந்தியப் போலீஸ் அதிகாரிகளும், துப்பாக்கி களுடன் சுமார் முப்பது போலீஸ்காரர் களும் திடீரென்று, சந்தடியில்லாமல் அமைதியோடி யிருந்த சிறு மதிலிருந்த அந்த இடத்திற்கு வந்தார்கள். அங்கே காந்திஜியும் அவருடைய சத்தியாக்கிரகிகளும் தூங்கிக்கொண்டு இருந்தனர்.

ஆங்கில அதிகாரி காந்திஜியின் படுக்கைக்கு அருகில் சென்று 'டார்ச்' விளக்கு வெளிச்சம் அவர் முகத்தில் படும்படி செய்து, "நீங்கள் மோகன்தாஸ் கரம்சந்திர காந்தியா?" என்று கேட்டார்.

"உங்களுக்கு நான் வேண்டுமா?" என்று காந்திஜி அமைதியாகக் கேட்டார். பின்னர், "காலைக் கடன்களை முடித்துக் கொள்ளத் தயவு செய்து அவகாசம் கொடுங்கள்" என்றார்.

காந்திஜி பல் துலக்க ஆரம்பித்தார். அதிகாரிகள், கையில் கடிகாரத்துடன் அவரைப் பார்த்துக்கொண்டே நின்றனர். அப்பொழுது காந்திஜி, தம்மைக் கைது செய்ய வாரண்டு இருக்கிறதா என்று கேட்டார். உடனே மாஜிஸ்டிரேட் உத்தரவைப் படித்தார்.

பிறகு அதிகாரிகளைப் பார்த்து, 'பிரார்த்தனை செய்வதற்காக இன்னும் சில நிமிட நேரம் கொடுங்கள்' என்றார். இது அனுமதிக்கப்பட்டது. உடனே காந்திஜி எழுந்து நின்று தமது சகாக்களுடன் பிரார்த்தனையைச் செய்தார். அவர்களைச் சுற்றிப் போலீஸார் நின்று கொண்டிருந்தார்கள்.

பிரார்த்தனை முடிந்ததும் அவரை அவசரமாக வெளியே அழைத்துச் சென்றனர்.

வேகம், சந்தடியில்லா ரகசியம்; விசாரணை இல்லை, நீதி இல்லை.

அரசாங்கம் தனக்கு இஷ்டமானதைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. குற்றம் சாட்டப்பட்டிருப்பவரோ, சிறை அறையின் நிசப்தத்தில் மூழ்கி இருக்கிறார்.



# சிறை உடலுக்கே- உள்ளத்திற்கல்ல

B. ராமமூர்த்தி பி.காம்., பி.எல்.

*1930*-ம் ஆண்டு! வரலாற்றுப் பிரசித்தி பெற்ற தண்டி யாத்திரை தொடங்குமுன்.

அகிம்சாமூர்த்தி, உப்புச் சட்டத்தை மீறும் போராட்டத்தில் பெருவாரியாகப் பங்கேற்கும்படி, நாட்டுமக்களுக்கு அறைகூவல் விட்டிருந்தார்.

ஒருவேளைச் சோற்றுக்கே திண்டாடும் ஏழை மக்கள் குடிக்கும் கஞ்சிக்குப் போடும் சிறிதளவு உப்பிற்கு வரிகொடுப்பது, அக்கிரமம் என்று திரு. சுந்திரம் உள்ளம் உணர்ந்து வேதனைப்பட்டது.

தேசிய உணர்வும், தியாகப் பண்பும் ஊற்றெடுக்க, தம் தந்தையிடமும் கலந்தாலோசிக்காமல் போராட்டத்தில் கலந்து கொள்ளத் தம் பெயரைப் பதிவு செய்துகொண்டார்.

தமிழ் நாட்டிலே, ராஜாஜியின் தலைமையில், பெரிய உப்பளங்களைக் கொண்ட வேதாரண்யத்தில் உப்புச் சத்தியாக்கிரகம் செய்யத் தொண்டர்கள் திரண்டனர்.

ஆங்கிலேய அடக்குமுறைகள் வெறித்தனமாகத் தலைவிரித்தாடிற்று. நாட்டுப் பற்றும், இன உணர்வும் அடகு வைக்கப்பட்ட காவல் துறையினர், மனத்தில் குரூரமும், கைகளில் தடிகளுடனும் வேதாரண்யத்தில் குவிக்கப்பட்டனர்.

புறப்படுவதற்கு ஒரு வாரத்திற்கு முன்பு திரு. சுந்திரம் தம் தந்தையை அணுகினார்.

தொண்டர் படையில் சேர்ந்திருப்பதையும், சட்ட மறுப்புப் போராட்டத்தில் கலந்துகொள்ளப் போவதையும் கூறி, தந்தையின் அநுமதியை வேண்டினர்.

அமரர் குப்புசாமி நாயுடு, பழுத்த காந்தீயவாதி. காங்கிரஸ் இயக்கத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். தசரதனைக் கப்பிய கலக்கம், தந்தையையும் பற்றியது.

போராட்டத்தில் தம் மகன் பங்கு கொள்வதை மனம் இசைய வில்லை. தந்தை தனயனிடையே நீண்ட வாக்குவாதம் நடந்தது. போராட்டம் கூடாது என்பதற்காக அவர் மறுக்கவில்லை. சுந்தரம் வயதில் சிறியவனாக இருக்கிறானே என்று கூறி, மூத்த மகன் தேவராஜுலுவை அனுப்பலாம் என்றுதான் தந்தையார் கருத்து தெரிவித்தார்.

சுந்தரத்தினால் தந்தையின் ஆலோசனையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

ஒவ்வொரு குடும்பத்துக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கும் பிரச்சனை அல்ல இது. முன்னூறு பேர்கள் மூன்று கோடி மக்களைச் சுரண்டுவதை எதிர்க்கும் சுதந்திர வேட்கையை வளர்த்துக் கொண்டு, போராட்டத்தின் நியாயத்தை உணர்ந்து பங்குகொள்ள இருக்கும் அவர், எந்தக் காரணம் காட்டினாலும் சமாதானம் அடைவாரா ?

'தொண்டர் படைக்குப் பெயரைப் பதிவு செய்துகொண்டது நான்தானே தவிர அண்ணன் அல்ல. நான் போராட்டத்தில் கலந்தேயாக வேண்டும்' என்றும் பிடிவாதமாகக் கூறினர்.

''பெயர் கொடுக்கும்போது என்னைக் கேட்டா கொடுத்தாய் ? இப்பொழுது மட்டும் ஏன் அனுமதி கேட்கிறாய் ?'' என்றார் தந்தை.

''நீங்கள் தீவிர காந்தீயவாதி. தேசப்பற்றை என் ரத்தத் திலேயே புகுத்தியிருக்கிறீர்கள். எனக்கு அனுமதி தரமாட்டீர்கள் என்பதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை'' என்று ஏக்கத்தோடு கூறினர் சுந்தரம்.

தந்தை வாயடைத்து நின்றுவிட்டார், மகனின் உறுதியைக் கண்டு. பெற்ற மனம் பெருமைப்பட்டது. நிறைந்த உள்ளத்தோடு சுந்தரம் அறப் போராட்டத்தில் கலந்து கொள்ள வழியனுப்பப் பட்டார்.

கொதித்தெழுந்த சத்தியாகிரகிகள் திருச்சியிலிருந்தே கால் நடையாக வேதாரண்யம் நோக்கி நடைபோட்டார்கள். சுமார் 72 கல். நீண்ட அந்தப் பாதையைக் கடக்க எடுத்துக் கொண்ட நாட்கள் பதினைந்து.

''அச்சமில்லை – அச்சமில்லை'' என்ற பாரதியாரின் பாடலும், ''கத்தியின்றி, ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது–யுத்தமொன்று வருகுது'' என்ற நாமக்கல் கவிஞரின் பாடலும், விண்ணதிரச் செய்தன.

ஆயுதத்தையே நம்பி யுத்தம் நடத்திய ஆங்கிலேயருக்கு, இந்த ஆன்ம சக்தியைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

அப்பொழுது தஞ்சை மாவட்டத்து ஆளுநர் 'தார்ன்' என்ற அதிகாரி. போராட்டக்காரர்களுக்கு, உணவோ, ஒதுங்க இடமோ, கொடுக்கக் கூடாது என்ற அவசர தடையுத்தரவைப் பிறப்பித்து லட்சக்கணக்கான துண்டு நோட்டீஸ்களைக் கிராமங்கள்தோறும் விநியோகித்திருந்தார். அதிகார அச்சுறுத்தல் ஒருபக்கமும், நாட்டுப் பற்று பின்னொரு பக்கமுமாக மக்கள் தத்தளித்தனர்.

அவர்கள் இறுதியாகக் கையாண்ட யுக்தி, வரலாற்றுப் பார்வையாளர்களை மலைக்கச் செய்திருக்கிறது. தயிர் சாதத்தை சட்டிகளில் போட்டு, துணியால் மூடி, ஆங்காங்கே பெரும் மரங்களுக்கு அடியில் மண்ணில் புதைத்து வைத்திருந்தார்கள். சத்தியாகிரகிகள் மர நிழல்களில் இளைப்பாறியும், மணலிலிருந்து தோண்டிய சட்டியில் உள்ள உணவை அருந்தியும் தூரத்தைச் சிரமமின்றிக் கடந்தனர்.

வேதாரண்யத்தில் கடல் நெடுக மக்கள் வெள்ளம் நெளிந்து கொண்டிருந்தது. ஏற்கனவே பயிற்சியளிக்கப்பட்ட முறையில், அநீதியான உப்புச் சட்டத்தை எதிர்த்து, சுந்தரமும், இதர தொண்டர்களும் உப்பை அள்ளினார்கள். முன்னேறிக் கொண்டிருந்த தேசபக்தர்கள் மீது வேங்கையென காவல் படையினர் பாய்ந்தனர். இரும்புப் பூண் போட்ட தடிகளால் அடிகளைப் பொழிந்தனர். இரண்டு மூன்று நிமிடங்களில் தரை முழுவதும் மனித உடல்கள், எங்கும் முக்கல், முனகல்.

பதினாறு வயதே நிரம்பிய சுந்தரத்தின் மீது, உப்புச் சட்டம் 74-ம்பிரிவு, இ. பி. கோ 146 பிரிவின் கீழும், குற்றப் பத்திரிகை வாசிக்கப்பட்டது. நீதிமன்றத்தில் வயதை 20 என்று கூட்டியே கூறினார்.

மேஜராகாத இளம் குற்றவாளிகளை, மன்னிக்கவும் சீர்திருத்த பள்ளிக்கு அனுப்பவும் சட்டத்தில் இடமுண்டு. சிறை சென்று, மறுப்பைத் தெரிவிக்கும் தம் லட்சியத்திற்கு இடையூறு ஏற்படக் கூடாதென்றே கூறிய பொய் இது.

குற்றத்தை ஒப்புக்கொள்ளவும், நீதிமன்றம், ஆறுமாத சிறை தண்டனையை சுந்தரத்திற்கு அளித்தது. அதிகபட்ச தண்டனையைப் பெறவேண்டுமென்று, சத்தியா கிரகிகளிடையே ஒருவித உத்வேகம்.

திருச்சி ஜெயிலில், இரண்டாயிரம் அரசியல் கைதிகளுடன் சுந்தரமும் அடைக்கப்பட்டார். தலைவர்களைப் பிரித்து, வேறு சிறைகளுக்கு மாற்றிவிட்டார்கள்.

சிறையில் முதல் நாள்!

கைதிகளுக்கு உணவு கொண்டுவரப்படுகிறது. கருமை போர்த்தப்பட்ட சாத உருண்டைகள் வினியோகிக்கப்படுகின்றன. உப்பும் ஊட்டமுமற்ற உணவு. அவைகளைக் கொண்டுவரப் பாத்திரங்கள், பழுப்பேறிய மரக் கரண்டிகள், இவற்றைப் பார்த்தாலே ஒருவித அருவருப்பு.

சிலர் மன்னிப்புக் கடிதங்கள் எழுதி, சிறையை விட்டுச் சென்றார்கள். பலநாட்கள் நீர் அருந்தியே, காலம் தள்ளியவர்களும் உண்டு. சுந்தரமோ, சிறு உருண்டைகளாக வாயில் போட்டு, அதற்குமேல் நீரைக் குடித்து வயிற்றில் சாத கோலிகளைத் தள்ளினார். மெதுவாகத் தம்மை, இந்தப் புதிய சூழ்நிலைக்குத் தயாராக்கிக் கொண்டார்.

சிறையிலே எவ்வளவோ கட்டுத் திட்டங்களுக்குட்பட்டிருக்க வேண்டும். விரும்பினாலும், வெறுத்தாலும், அங்கே இடப்படுகின்ற வேலைகளைச் செய்தாக வேண்டும். வாழ்க்கைக்கு வேண்டிய அடிப்படை வசதிகளும் மறுக்கப்படுகின்றன.

இவைகளை சுந்தரம் அணுகிய தன்மையே வேறு. இந்தக் கட்டுப்பாடுகள், உடலுக்கே அன்றி உள்ளத்திற்கல்ல காலா காலங்களில் ஒருவர் தன் காரியங்களைச் செய்து கொள்ளப் பழக்கப்படுத்திக் கொள்கிறார்கள். தன்னைத் தானே அடக்கிக் கொள்வதற்கு ஒரு வாய்ப்பும், பொறுமையைக் கடைபிடிக்கவும், சிறைவாசம் சந்தர்ப்பமளிக்கிறது என்கிறார்.

இன்று சுந்தரத்திடம் காணப்படும் கரை காணமுடியாத பொறுமையும், சரிசமமாக யாவரிடத்திலும் பழகும் தன்மையும், நிமிடம் தவறாது, தம் அலுவல்களை செய்யும் பாங்கும், சிறையிலே தான் வேரூன்றித் தழைத்திருக்கிறது என்பதை நாம் உணருகிறோம்.

அன்று ஜார்ஜ் மன்னர் பிறந்த நாள். சத்தியாக்கிரகிகள் ஒன்றுகூடி, காந்தியத் தத்துவங்கள் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். சிறை அதிகாரி இவர்களை நோக்கி வந்தார்.

(இன்னும் வரும்)



# A JAIL DIARY

—RAJAJI

We ride down to the prison in a motor-car. Krishnamachari accompanied us, but avoided all demonstration. I was weighed at the gate. My handbag contained a tin of tooth powder, some cloves, a quire of paper, a sheet of pins, some pencils and a fountain-pen; I had also a bottle of "Swan" ink, a kooja, a small brass cup and some books–the Bible, Shakespeare, Tayumanavar, a volume of Tamil "Mahabharat" seven volumes of P. C. Roy's "Mahabharat" and Robinson Crusoe. My glasses, both reading and distance, were with me.

A case of ointment for my boils and a bottle of asthma mixture were also among my things. We were taken to the solitary imprisonment cells. The Superintendent walked down our block.

"Are you the sick man?"

"Am I put down as the sick man? Yes, I am."

"I don't know. You came in with a bottle of medicine. So I thought you were sick."

I explained my asthmatic troubles. I then told him about my boils.

Just before lock-up two unglazed chatties are placed in a corner of our cell by the scavenger. These are to serve as commode and chamber pot at night. Absorbent chatties without any cover for them, kept within four feet of our bed, do not make the place sweet.

They are not even always your commode or pot, for they are removed in the morning and mixed up with others, and distributed again in the evening, not necessarily the same which you have used. I tried to use the one as a cover for the other, but the pots, having round bottoms, wobble on the ground too much to be put one on the other safely.

My "History Board" shows the following particulars :
Political Regd. No. 8398. Declined to appeal.
State of Education "C" ("C" MEANS ILLITERATE.)

My stomach has gone from one extreme to the other now. Instead of constipation, I have loose motions and have to get up during nights.

The Surperintendent with his two Sub-Assistant Surgeons called at my cell to-day and enquired about my health.

The amusing part of my interview was the persistent manner in which the little doctor went on interpreting in an explanatory way in Tamil what the big doctor was telling me in English, quite forgetting, I suppose, that I could understand English.





உப்பு சத்தியாகிரகத்தின் போது கைது செய்யப்பட்டு, பெல்லாரி சிறையில் திரு. காமராஜ் சிறைவைக்கப்பட்டிருந்தார். அவருடைய பாட்டியார் பார்வதி அம்மாள் நோய்வாய்ப்பட்டு, கவலைக்கிட மாக இருந்ததால், பரோல் அனுமதி பெற்றுச் சிறைக்குச் சென்று அழைத்த போது, அந்தச் சலுகையை திரு.காமராஜ் மறுத்துக் கட்டுப்பாடான காந்தீயத் தொண்டர் என நடந்து காட்டினர்.

---





பலம் கொண்டவரையில் அடித்தும் கையில் பிடித்த கொடியை விடாமல் கடைசி வரையில் பற்றியிருந்து உயிர் நீத்த திருப்பூர் குமரனின் வீரச் செயல் நடந்தது, இந்த உப்புச் சத்தியாகிரகத் தின் போதுதான்.





# மறக்க முடியாத நிகழ்ச்சி!

பி. ஆர். ரங்கநாயகி அம்மாள்

நாட்கள் நகர மறுக்கின்றன நாங்களும் எண்ணிக்கொண்டேயிருக்கிறோம். விடுதலை பெற்று வீடு திரும்ப என் தம்பி சுந்திரத்திற்கு இன்னமும், அறுபத்திரண்டு முழுநாட்கள் இருக்கின்றன.

என் தாய் லக்ஷ்மியம்மாள் கவலைப்பட்டுக்கொண்டேயிருக்கிறாள். பிள்ளைப் பாசம்! நாட்டு விடுதலை, தியாகம் என்றெல்லாம் தெரிந்தும், பெற்ற மனம் அமைதியடைய மறுக்கிறது.

என் தந்தை குப்புசாமி நாயுடு ஆழ்ந்த பக்திமான். இப்பொழுதெல்லாம் அவர் உள்ளம் இருப்பது கடவுளிடத்தில் அல்ல; கம்பிகளுக்குப் பின்னால், சென்னையில் இருக்கும் தம் மகன் சுந்தரத்திடம்.

இந்த நைந்த சூழ்நிலையில் அந்தச் செய்தி இடிபோல் தாக்கிற்று. 'சாகும்வரை உண்ணாவிரதம்' சிறையில் சத்தியாக்கிரகிகளின் அறப்போர் என்ற செய்தியைப் பத்திரிகைகள் பிரசுரித்தன.

நானும் என் தந்தையும் இடிந்துவிட்டோம்.

தாயாருக்குத் தெரியவே கூடாது; அவர் கவலையில்லாது இருக்கவேண்டிய நேரம்— மருத்துவர்கள் கூறுகிறார்கள். இப்பொழுது என் தாய் இரண்டு ஜீவன்களின் இருப்பிடம். இவ்வளவு கொந்தளிப்பிலும், என் கடைசித் தம்பி ராஜகோபால் நிம்மதியாகக் கருவில் வளர்ந்து கொண்டிருந்தான்.

எங்கள் முயற்சிகள் பலனளிக்கவில்லை. தன் சதை, சிறையில் வாடுவதை தாயினுடைய உள்ளுணர்வே காட்டி விட்டதுபோலும்

அண்மையில் காலமான வழக்கறிஞர் ஆர். ஆர். நாயுடு எங்களுக்குக் குடும்ப நண்பர். அவரை அழைத்துக் கொண்டு ருக்மணி என்ற என் கைக் குழந்தையுடன் நானும் தந்தையும், சென்னைக்குப் புறப்பட்டோம்.

பேட்டி காண அநுமதி கிடைத்தது. மணி நான்கு. சிறை அதிகாரியின் காவலுடன் சுந்தரம் வந்து கொண்டிருந்தான். தூரத்தில் வரும்போதே, சகோதர பாசம் இனம் கண்டு கொண்டது.

தம்பி இளைத்திருந்தான். தூய வெள்ளைக் கதரே அணிந் திருந்த உடலில் கைதியின் அடையாளமான V கழுத்து அணிந்த அரைக் கை சர்ட்; முழங்காலுக்குமேல் இருக்கும் டிராயர்; நடையிலே தளர்ச்சி. ஆனல் முகத்திலே அதே சாந்தம், அமைதி

அருகில் வர வர என் பார்வை மங்கிக் கொண்டே வந்தது. கண்ணீர், திரையிட்டு மறைத்தது.

பின்னல் நின்று கொண்டிருந்த என் தந்தையைப் பார்த் தேன். அவரும் மகனைப் பார்த்தார். இருந்தாலும் வேறு பக்கம் திரும்பிக் கொண்டார். பொங்குகின்ற உணர்ச்சிகளுக்கு ஏதோ போக்குக் காட்டி அடக்க முயற்சி செய்கிருர் என்பதை என்னல் யூகிக்க முடிந்தது. நான் பெண்; என் மனப் பளுவை கண்ணீர் சிந்திக் கரைத்துக் கொள்ளலாம்.

ஆனல் என் தந்தையால் முடியாது. அவர் காந்தீயத் தத்து வத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர். போராட் டத்தில் பங்குகொள்ளச் சுந்தரத்திற்கு அநுமதியளித்து, வழியனுப் பியவர். இருந்தாலும் அவர் உறுதி, மகனின் கோலத்தைக் கண்டு கொஞ்சம் தடுமாறியது.

இப்பொழுது நேருக்கு நேராக நிற்கிறேம். உடல் நிலையைப் பற்றிக் கேட்க வேண்டும், உண்ணுவிரதத்தைப் பற்றிப் பேசவேண்டும் என்றெல்லாம் கற்பனை செய்த உள்ளம் திடீரென்று முடங்கிவிட்டது. கண்கள் மட்டுமே உறவாடின.

மௌனம். யார் பேசுவது? எப்படி ஆரம்பிப்பது? குழந்தை ருக்மணியை அழைத்துச் சென்றது இப்பொழுது கைகொடுத்தது. எலும்பும் தோலுமாக இளைத்திருந்த தம்பியிடம் கேட்க நினைத்ததையெல்லாம் குழந்தையின் மூலம் ஆரம்பித்தேன்.

'மாமாவை அடையாளம் தெரிகிறதா?'

அடையாளம் தெரியவில்லை என்று அந்த நான்கு வயதுக் குழந்தை தன் பிஞ்சு தலையை ஆட்டியது.

'தெரியவில்லையா?'

சிரித்துக் கொண்டே அந்தக் கம்பிகளின் இடுக்கு வழியாக கையை நீட்டி, குழந்தையின் முகத்தை வாஞ்சையோடு வருடினுன்.

சுந்தரம் சிரித்தான். என் தம்பி சிரிக்கிருன். அந்தச் சிரிப்பு அருவிபோல இசைத்தது. வாடிய பயிர், மழை நீர் கண்டது போல ஓர் உணர்ச்சி; வயிற்றிலே பால் வார்த்த குளிர்ச்சி. அடக்கு முறைக்கு ஆளாகி சிறையில் துன்பப்பட்டாலும் உள்ளம் தெம்பாகவேயிருக்கிறது என்பதை இந்தச் சிரிப்பே வெளிப்படுத்தியது.

எங்கள் மூன்று உள்ளங்களின் பொங்கும் உணர்ச்சிகள் ஒன்ருக கலந்தன. புனிதமான திருவேணியின் சங்கமம்.

சிறைக் கம்பிகள், எங்களிடையே எந்தத் தடையும் போட முடியாது வலுவிழந்து நின்றுகொண்டிருந்தன.



# வாய்மைக்கு அறுபது !

டி. சதாசிவம்
*ஆசிரியர் 'கல்கி'*

திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் ராஜாஜியின் பெரு மதிப்புக்கும் அன்புக்கும் பாத்திரமானவர் என்றாலே போதும், அதற்கு அதிகமாக அவரைப் புகழ்ந்துரைக்க வார்த்தைகளே இல்லை.

அறுபதாண்டுகள் நிறம்பப் பெறும் திரு. சுந்தரம் உண்மையே மனித உருக்கொண்டு வந்ததுபோல் திகழ்கிறார். இதனைப் பாரதம் முழுவதும் தொழில், வர்த்தக வட்டாரம் மட்டுமின்றி அதிகார வர்க்கமும் நன்கு அறியும்.

சாதாரணமாக ஒரு நிறுவனத்தின் ஆண்டறிக்கை சமர்ப்பிக்கப்படும் பங்குதாரர்கள் கூட்டத்துக்கு எல்லாப் பங்குதாரர்களும் வர மாட்டார்கள். அதில் சிரத்தை காட்டுபவர்கள் சிலர் மட்டுமே இருப்பார்கள். ஆனால் லக்ஷ்மி மில்ஸ் பங்குதாரர் கூட்டம் என்றால் ஏதோ கோலாகலத் திருவிழா போல் அனைவரும் வந்து மொய்ப்பார்கள். பங்குதாரர்களுக்கு நிர்வாகத்தினரிடம் அத்தனை அன்பு, மதிப்பு.

தொழில் துறையில் மிகு அரிய சாதனைகள் புரிந்து மிக உயர்ந்த நிலைக்கு வந்துள்ள திரு. சுந்தரம் எளிய வாழ்க்கையே நடத்துகிறவர். அடக்கமும் அமைதியும் அவர் சுபாவமாகவே பெற்றவர்.

செல்வத்தின் பயன் பிறருக்கு உதவுவதிலேதான் இருக்கிறது என்பதை நன்கு உணர்ந்துள்ள இந்தப் பேரறிவாளன் திரு, ஹருணி நீராக விளங்குகிறது. மருத்துவமனை, பள்ளிக்கூடம் போன்ற பல தர்ம காரியங்களுக்கு அறக் கட்டளைகள் நிறுவி உள்ளார்.

இப்படிப்பட்ட காந்தீயச் செம்மல் ராஜாஜியின் உள்ளத்தை ஈர்த்ததில் வியப்பென்ன? 'சுதந்திராக் கட்சியின் நோக்கம் ஆட்சியைக் கைப்பற்றுவதாக இருக்கக் கூடாது; ஜன நாயகக் கோட்பாடுகளையும் சுதந்திரப் பொருளாதாரத்தின் மேன்மையையும் மக்களுக்கு எடுத்துக் கூறி, அவர்களைப் பொறுப்புள்ள பிரஜைகளாக மாற்றுவதே, அதன் முதல் கடமையாக இருக்க வேண்டும்' என்ற ராஜாஜியின் அறிவுரையை சிரமேற் கொண்டு அவர் இயங்கி வருகிறார்.

திரு. ஜி. கே. சுந்தரத்துக்கு மணி விழா நடத்தும் நாம் அன்பையும் உழைப்பையும் வாய்மையையும் ஈகையையும் போற்றிக் கொண்டாடுகிறவர்களாகிறோம்.

---

பள்ளியில் படிக்கும் காலத்தில் திரு சுந்தரம் விளையாட்டுக்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

பாப்பநாயக்கன்பாளையம் XI என்ற ஹாக்கி குழுவில் இவரும் ஒரு விளையாட்டுக்காரர். பல போட்டிகளில் கலந்து கொண்டவர்

சில சமயங்களில், தங்கள் குழுவுக்கு வெற்றி பெறும் வாய்ப்பு இல்லை என்றால் உணர்ச்சிகளுக்கு அடிமைப்பட்டு எதிர் அணிக்காரர்கள் காலைக் குறி வைத்து அடிக்கும் முரட்டுத்தனமான 'Foul Game' விளையாடுவதுமுண்டு.

இத்தகைய சந்தர்ப்பங்களில் உடனே சுந்தரம், தம் அணி ஆட்டக்காரர்களின் போக்கை கண்டிப்பார்.

---

சுந்தரம் ஆழ்ந்த தெய்வபக்தி கொண்டவர். மார்கழி மாத, ஊர் உலாக்களிலும், காலை பஜனைகளிலும் தவறாது பள்ளிப் பருவத்திலேயே கலந்து கொள்வார்.

—தகவல் ரங்கநாதன்
காஸ்மாபாலிடன் கிளப்

# கோவை மாவட்ட காங்கிரஸ் தலைவர்



திரு. எம் கே. மத்தி கவுடர் என்றாலே கோவை மாவட்டம் நன்கு அறியும்.

தூய்மையான கதர் உடை; எப்பொழுதும் புன் சிரிப்பு கொண்ட முகம். எல்லோருடனும் சுமுகமாகப் பழகும் இயல்பு.

காங்கிரஸ் ஸ்தாபனத்துடன் நெடுநாள் தொடர்பும் ஈடுபாடும் கொண்ட திரு. மத்திகவுடர் *1969* முதல் *1971* –ஆம் ஆண்டு வரை கோவை மாவட்டக் காங்கிரஸ் தலைவராக இருந்து நெருக்கடி காலத்திலும் உறுதி தளராமல் பணியாற்றியவர்.

இப்பொழுது மீண்டும் திரு. மத்திகவுடரே கோவை மாவட்ட ஸ்தாபன காங்கிரஸ் தலைவராகப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.





அமரர்

## ஜி. குப்புசாமி நாயுடு நினைவு மருத்துவ மனை



அமரர் ஜி. வெங்கடசாமி நாயுடுவின் சகோதரி திருமதி இராஜம்மாள் குழந்தைப் பேற்றுக்குச் சில நாட்களுக்கு முன்பு 1930 டிசம்பர் 31-ஆம் தேதியன்று இறந்து போனார்.

மகப்பேற்றுக்கு முன்னர் அளிக்க வேண்டிய சரியான பராமரிப்பு இல்லாததால், அம்மையார் இறந்துவிட்டார் என்பதை திரு. ஜி. கே. சுந்தரம் தந்தையார் திரு. குப்புசாமி நாயுடு உணர்ந்தார். அன்றே அவர் முடிவு செய்ததுதான், பெண்களுக்கும் குழந்தைகளுக்குமான திரு. ஜி. குப்புசாமி நாயுடு நினைவு மருத்துவ விடுதியாக 1950-இல் முழு உருவம் பெற்று வளர்ச்சி அடைந்திருக்கிறது.



COBALT 60 TELETHERAPY



DEEP X-RAY TREATMENT FOR CANCER



# தெரிந்த மருத்துவ மனை தெரிந்துகொள்ள வேண்டிய செய்திகள்!

★ 1960-இல் கனடா அணுசக்தி நிலையத்திலிருந்து 165 மில்லி கிராம் ரேடியம் திரு. குப்புசாமி நாயுடு நினைவு மருத்துவ மனைக்குக் கொண்டு வரப்பட்டது.

★ இதில் முக்கால் பங்கு பெண்களின் புற்றுநோய்ச் சிகிச்சைக் காகப் பயன்படுத்தப்பட்டது.

★ தமிழ் நாட்டிலேயே இங்கேதான் எலெக்ட்ரான் கதிர்கள் மூலம் கான்சருக்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறது.

★ இந்த மருத்துவ மனையில் 3,000 க்யூரி சக்தி வாய்ந்த இரண்டு கோபால்ட் யூனிட்டுகள் உள்ளன.

★ இந்த யூனிட் ஒவ்வொன்றும் ரூ. 5 லட்சம் மதிப்புள்ளது.

★ பம்பாயில் உள்ள பாபா அணுசக்தி நிலையத்தில் பயிற்சி பெற்றவர்கள் இந்தக் கதிரியக்கச் சாதனங்களை இயக்கு கிறார்கள்.

★ இந்த மருத்துவ மனையில் 1958-ல் 100 நோயாளிகள் சிகிச்சை பெற்றனர்; 1973-இல் 870 நோயாளிகள் சிகிச்சை பெற்றுள்ளனர்.

★ இந்த மகப்பேறு மருத்துவ நிலையத்தில் 200 படுக்கை வசதிகள் உண்டு. இவற்றில் 60% சதவீதம் இலவச சிகிச்சைக் காகப் பயன்படுத்தப்படுகிறது.

★ ஆண்டுக்கு ஏறக்குறைய 5,000 பிரசவங்கள் கவனிக்கப் படுகின்றன. இதில் 30 சதவீதம் குறைப் பிரசவங்கள்.

★ இந்தக் குறைப் பிரசவக் குழந்தைகளைப் பாதுகாக்க வெப்ப தட்ப பெட்டிகள் (Incubators) உள்ளன. மருத்துவ மனையில் பிறக்கும் குறைப் பிரசவக் குழந்தைகளைத் தவிர, வெளியில் பிறக்கும் குழந்தைகளுக்கும் இந்த வசதி அளிக்கப்படுகிறது.

★ இந்த மருத்துவ விடுதியில் நாள் ஒன்றுக்குச் சராசரி 2 சிசேரியன் ஆபரேஷன்களும், 6 சிறிய ஆபரேஷன்களும் நடைபெறுகின்றன.





**Sri D. JAYAVARTHANAVELU**
Trustee

**The Kuppuswamy Naidu Charity Trust for Education and Medical Relief.**

Managing Director, Lakshmi Machine Works Limited.

**Young in years, Rich in Experience.**

---

**Brigadier Kesavalu** M. C., Dean - G. Kuppuswamy Naidu Memorial Hospital is one of the well-known Medical Administrator in the State.



Brigadier Kesavalu born on 21st May 1911, is a graduate from Madras Medical College. He was in active service in Middle East, Italy, Europe, U.K., Indo-China, Indo-Pakistan, Leah, Ladak, NEFA.

Brigadier Kesavalu during the Second World War won in 'Military Cross' and 'Mention in despatches' both are gallantry awards. He has Commanded various teaching Hospital of thousand beds and was grade 1 staff officer in Eastern Command Head quarters.

# DONATIONS TO
# G. KUPPUSWAMY NAIDU
# MEMORIAL HOSPITAL FUNDS

**(RECENTLY RECEIVED)**



| | | |
|---|---|---|
| 1. | Messrs. Valavadi Narayanaswami Naidu Trust and allied concerns for Cancer Clinic. The Cancer Clinic has been named as " Valavadi Narayanaswami Cancer Clinic." | Rs. 10 Lakhs |
| 2. | Messrs. L. R. G. Ranganayaki Ammal Trust for Cardiology Unit. The new block to be constructed is to be named after Sri L. R. G. Naidu. | Rs. 10 Lakhs |
| 3. | South India Viscose Ltd., towards enlargement of Hospital activities. | Rs. 3,15,000 |
| 4. | Messrs. Lakshmi Mills group has been donating regularly each year for the Trust and the said group consists of the following institutions ;- | Rs. 5 Lakhs |

a] The Lakshmi Mills Company Ltd., Coimbatore.

b] The Coimbatore Cotton Mills, Coimbatore.

c] Lakshmi Machine Works, Coimbatore.

d] Lakshmi Card Clothing Mfg., Co., (P) Ltd., Coimbatore.

e] Lakshmi Textile Exporters (P) Ltd., and

f] Rajalakshmi Mills, Coimbatore.

| | | |
|---|---|---|
| 5. | Miss E. Lazarus, a Director in the Coimbatore Cotton Mills Ltd., Singanallur, Coimbatore. Proposal to name one of the General Wards as 'The Rev. Dr. John and Mrs. Lazarus Ward. | Rs. 2 Lakes |
| 6. | Sethna Charities has earmarked for starting an Eye Clinic, equipped for eye surgery | Rs. 1,50,000 |
| 7. | Coimbatore Round Table Number 9 for Paediatrics Ward and Incubator | Rs. 60,000 |
| 8. | Thiru S. Nanjappa Chettiar | Rs. 50,000 |
| 9. | Sulur Sri Nanjappa Chettiar to mark the 25th year of the Trust | Rs. 25,000 |
| 10. | M/s. Voltas for the Silver Jubilee | Rs. 25,000 |
| 11. | Zamindar of Ilayarasanendal for the hospital | Rs. 15,000 |
| 12. | Thiru A. Veerappan Chettiar, Karur | Rs. 10,001 |
| 13. | Sri Ramakrishnan of Messrs. Ramakrishna & Co., Coimbatore as donations for the hospital. | Rs. 2,002 |
| 14. | Thiru G. Ranganathan of M/s. Ramakrishna & Co., Coimbatore. | Rs. 2,002 |



## மகளிர் சிந்தாமணி திறப்பு விழா



திரு. ஜி. ஆர். ஜி-யும் முதலமைச்சரும்

கோவை சிதம்பரம் பூங்கா அருகே ஏ. டி. டி. காலனியில் புதிதாகச் சிந்தாமணி மகளிர் சூபர் மார்க்கெட் கிளைத் திறப்பு விழா செப்டம்பர் மாதம் 26-ஆம் தேதி மிகச் சிறப்பாக நடைபெற்றது.

விழாவுக்கு வந்திருந்த அனைவரையும் சிந்தாமணி சூபர் மார்க்கெட் தலைவர் திரு. ஜி. ஆர். கோவிந்தராஜுலு வரவேற்றுப் பேசினார்.

தமிழக முதலமைச்சர் டாக்டர் கலைஞர் **மு. கருணாநிதி** புதிய கிளையைத் திறந்து வைத்து, ''சிந்தாமணி கூட்டுறவு சிறப்பு அங்காடி தமிழகத்தில் பல்வேறு கிளைகளுடன், மிக்க பெருமை யுடன் பாராட்டத்தக்க முறையில் நடக்கிறது. மற்ற கூட்டுறவு நிறுவனங்கள் எவ்வாறு நடக்க வேண்டும் என்பதற்கு சிந்தாமணி சூபர் மார்க்கட் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது'' என்று பேசினார்.

சிந்தாமணியில் 55 ஆயிரம் குடும்பங்கள் உறுப்பினர்களாக உள்ளன என்றும் மாதம் ரூ. 2 கோடிக்கு விற்பனை நடக்கிறது என்றும் கடந்த ஆண்டில் மட்டும் ரூ. 18 கோடிக்கு வியாபாரம் நடந்து உள்ளது என்றும் திரு. ஜி. ஆர். கோவிந்தராஜுலு தம் உரையில் குறிப்பிட்டார்.

---

The Level of a nation's civilisation can be measured by the social position occupied by its women.

---



# Cancer and Its Treatment

*By Dr. Kumari M. Leela Meenakshi*
M. B. B. S., D. R., F. F. R. (LOND)

Cancer or malignant disease, is causing increasing concern to the world in general and to the medical profession in particular. The number of cancer patients attending the hospital has increased sizably. In the West heart diseases which topped the list for taking the highest toll of lives, are being fast replaced by malignant diseases. In our country according to 1969 statistics 4.5 lakhs died of this diseasese and another 5 lakhs were suffering from the same.

**What is cancer ?**

Cancer is a lay term which refers to a group of diseases characterised by abnormal uncontrolled, lawless growth of body cells. To elaborate this further :- Cells are the fundamental units of all living matter. In the normal process of growth and repair, cells grow and take their place in the economy of the body according to what may be called the "Rules of Nature". Sometimes for reasons unknown, a cell, or a group of cells, break the ordinary rules of nature. They behave in a disorderly way which unless checked by treatment will interfere with normal cells functioning, costing the life of the individual. Cancer can be cured, if diagnosed early and treated adequately. As a rough estimate, nearly 1/4 to 1/3 of all cancer patients can be cured.

The disease occurs mostly in adults of middle life; but children also suffer but much less frequently. It affects all parts of the body; but certain organs which are exposed to repeated injuries like tongue, cheeks and lips in tobacco chewers; throat and tongue in smokers; generative organs and breasts in women; are the frequent sites. The disease has also been reported as an occupational hazard in coal mine workers who inhale coal dust; radiation workers who are constantly exposed to radiation; asbestos workers who inhale the dust and whose hands are exposed to the irritant chemicals etc.

Cancer is neither contagious nor communicable. In other words you cannot "catch cancer" from cancer patients. It is not inherited by birth either. But we do have cancers of certain organs occuring in more than one member of the family.

**Diagnosis**

Cancer in early stages does not produce any signs. Pain is not an early sign, and when it occurs the condition may well be along. Hence certain warning signs have been listed, which may mean early cancer. Namely – a painless lump or thickening in breast or elsewhere; a sore that does not heal, particularly about the mouth, tongue or lips; blood-stained discharge from any body opening; any change in colour and size of mole or wart; persistent indigestion or difficulty in swallowing; any change in the normal bowel habit.

**Spread**

The disease starts in an organ and the body defences keep it confined to the organ for varying periods of time. If the disease can be detected at this stage it can be cured, either by surgical removel or radiotheraphy, by strerilisation of the area of all cancer cells.

If it is not treated at this early stage it grows out of the organ to involve the tissues around and the local lymph glands. Even at this stage the disease can be cured with radiation.

If still left unchecked the cancer cells find their way into the blood circulation. travel all over the body and form secondary growths in different organs. At this stage cure is

not possible. But with radiation and special anti-cancer drugs the patient can be kept comfortable till the end.

**Treatment : Radiotherapy**

This is a branch of medicine where ionising radiations are used for treating diseases. Today Cobalt treatment is an outcome of this.

When living cells are exposed to radiations, depending on the amount of energy these cells absorb, they show, permanent damage or partial to full recovery. This is the basis of radiotherapy. Adequate dosage or energy transfer to destroy the cancerous growth is given to the patient. Care is taken to preserve healthy normal surrounding tissues to recover and heal or repair the cancerous area after the disease is destroyed. This involves careful treatment planning and care of the patient during and after treatment. These patients are periodically checked up to see that the disease is fully destroyed and nothing is left behind to grow again.

**Facility in Coimbatore for treatment**

Radiology department was started in 1958, in G. Kuppuswami Naidu Memorial Hospital for Women and Children, Coimbatore, with diagnostic radiology and radiotheraphy facilities. Radium, radioactive Strontium and deep X-Ray treatments have been given to cancer patients since then. There is an average attendance of 600 patients per year. Till now only women were treated as in-patients; men came in daily for treatment as out-patients. Recently a tele-Cobalt unit has been added to the equipments already available. In-patient facilities have been made for hospitalising men patients also by adding new wards. Now in Coimbatore a full range modern facilities for treating most varieties of cancers has been made available at the G. Kuppuswami Naidu Memorial Hospital. This has been a long felt want in these parts and this obviates the necessity of patients going far away from their homes for treatmemet.

*( Assisted by Kumari P. K. Jayalakshmi* B. Sc. *)*



# ஆழ்வார்கள் அநுபவித்த அலர்மேல்மங்கை உறைமார்பன்

By Dr. G. T. GOPALAKRISHNA NAIDU
Publishers : MERCURY BOOK CO.
COIMBATORE-1
Price Rs. 3

## மதிப்புரை

"காக்கைச் சிறகினிலே நந்தலாலா-உன்னைக். காணு மின்பம் தோன்றுதடா நந்தலாலா; தீக்குள் விரலை விட்டால் நந்தலாலா-உன்னைத் தீண்டுமின்பம் தோன்று தடா நந்தலாலா'' — என்ருன் பாவேந்தன் பாரதி. இங்ஙனம் நோக்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரந்தாமன், 'விண்ணுர்ந்த வேங்கடத்தே' ஏழுமலை யானுய் எழிற்கோலம் கொண்டுள்ளான். அந்த அலர் மேல்மங்கை உறைமார்பனை, வேங்கடநாதனை, வேதாந்தக் கூத்தனைக் கண்ணுரக் கண்டு, வாயாரத் துதித்து, மெய்யாறத் தொழுதவர்கள் பலர்.

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று தீந்தமிழ்ப் பாசுரங்களால் மெய்யுருகப் பாடிச் சொல்லோவியம் தீட்டியுள்ளனர் ஆழ்வார் பதின்மர். ஏழுமலையானைக் கண்ணனுகவும் இராமனுகவும் திருவிக் கிரமனுகவும் 'தாழ்சடையும் நீள் முடியும் ஒண்மழுவும் சக்கரமும் சூழ் அரவும் பொன் நாணும்' கொண்ட வனுகவும் ஆழ்வார்கள் கண்டு பாடியுள்ளனர்.

இவ்வாறு ஆழ்வார்கள் அனுபவித்த அலர்மேல்மங்கை உறைமார்பனை, நாமும் அநுபவிக்கும் பொருட்டு டாக்டர். ஜி. டி கோபாலகிருஷ்ண நாயுடு அவர்கள் இப் பெரிய நூலை அழகிய முறையில் ஆக்கித் தந்திருக்கிருர்.

பக்திப் பணி புரிவதையே தம் கடனுகக் கொண்டுள்ள ஆசிரியர் நூலின் ஆரம்பத்தில் விண்ணோர் தொழும் வேங்கடமாமலை பற்றியும், அங்கு நித்தமும் வழிபாடு நடக்கும் விமரிசை பற்றியும் விளங்க உரைக்கின்ருர். நூலின் இறுதியில் முத்தாய்ப்பு வைப்பதுபோல் இறை வனைப் பரவும் போது கையாள வேண்டிய விதிமுறைகளை எடுத்துரைக்கின்ருர். இடையிடையே வேங்கடவனைப் பரவிய தொண்டர் பலரின் பெருமையினையும் கூறுகின்ருர். ஆழ்கடலில் மூழ்கி நன்முத்து எடுப்பதுபோல் ஆழ்வார்களின் பாசுரக் கடலில் மூழ்கியெழுந்து, 'வான் நின்ற சோலை வடமலை மேல் நின்ற மாயவனைப்' பற்றி நாம் அறிந்து கொள்ளச் செய்த ஆசிரியர்க்கு நன்றிகூறி அவர்தம் பக்திப் பணி தொடர வாழ்த்துவோம்!



மணி உயர்நிலைப் பள்ளி

வனப்பும் ஒழுங்கும்
கட்டுப்பாடும் நிறைந்த
இம்மாதிரியான
உயர்நிலைப்
பள்ளியைப் போல
இந்தியாவில் நான்
எங்கும் கண்டதில்லை.

D. F. காரகா
'கரண்ட்'



நேருஜி பங்காரா

## பள்ளியின் சிறப்பு அம்சங்கள்

1) **1960**— திரு. N. சின்னசாமி நாயுடு (தலைமையாசிரியர்) அவர்களுக்கு ஆசிரியர் தேசீய விருது அளிக்கப் பட்டது.

2) **1962**— திரு. சுரேஷ் பங்காரா இப்பள்ளியின் மாணவன். இந்தியாவிலேயே சிறந்த என். சி. சி. கேடட்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

3) **1972**— திரு. சித்தப்பாஜி உடற்பயிற்சி சிறப்பு விருது பெற்றார்

☐ பள்ளியின் 10, 11 வகுப்புகளில் இன்ஜினீயரிங்- செக்ரடேரியட் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன.

**N. சின்னசாமி நாயுடு M. A. L. T.**
தாளாளர்

**B. ஏகாம்பரம் M. A. L. T.**
தலைமை ஆசிரியர்